நாமகள். வேறு.

618. மின்னும் பளிங்கிற் றெடுத்தென்ன விளக்குஞ் சாயல்வெண் டிருவுருவும்
வெள்ளித் தகடுஞ் சமழ்ப்பவிதழ் விரிக்கும் வெண்டா மரைமலரு
மன்னும் படிக வெண்மாலை வடமு முவக்கு மதற்கேற்ப
மாறு வெள்ளை மதியுடையேம் வாக்கும் புகுந்தார் பதம்பணிவாந்
துன்னுந் திரைநீர்ப் பெருவாரி சூழ்மண் முழுது முட்காப்பத்
துவன்று சிறைசற் றேவிரிக்குந் தோகை மயில்வா கனமேற்கொண்
டுன்னும் பழைய சிரடியா ருளக்கட் டுன்னை யெதிர்தோன்று
மும்பர் பெருமான் விடைக்கழிவா ழொருவன் றன்னைக் காக்கவென்றே.

துர்க்கை.

619. காட்டுங் கனல்கண் பொழிதருவெங் காலன் கடுக வுதைத்துவரு
கடிய நெடிய கொடியமுரட் கடாவுங்கதறி யோட்டெடுப்ப
வாட்டுந் தகுவர் குலம்புரக்கும் வலிகோட் டெருமைக் கரும்போத்து
வாய்சோரத் தள்ள வதன்றலைமேல் வைத்தானின் றியபொற் பதக்குமரி
யாட்டுஞ் சமய மாதினுக்கு மாதாரங்க ளாதிநடுக்கு
மத்துவாவோ ராதினுக்கு மமையுந் தானே முதலென்று
தீட்டும் படியா வருந்தெளியத் தெளித்தாங் காறு முகத்திகழச்
செல்வ மலியு மிடைக்கழிவாழ் சேயைப் பரிந்து காக்கவே. (க)

சத்தமாதர். வேறு.

620. சிறையோதி மஞ்சே மயூரநா காசனன் சியமயி ராவதப் பேய்
திகழரி யூர்த்துவே தம்பினு கஞ்சத்தி திரிசூலம் வச்சிரஞ்சூன்
முறையே சுமந்தடியர் துன்பமு மின்பமு முருக்கிப் பெருக்கியருளு
முழுமாத ராயதிற லெழுமாதரும்புடவி முற்றுமெற் றுந்தரங்க [றுபன்
நிறைபோர் கருங்கடல் புரண்டுமே டியதென்ன நெடுமென்று குறியோன்
னெடியவா னவருமா சங்கையுட் கொண்டுழல நீள்சிறைத் துணைவிரித்
மறையோர் மயூரத் திவர்ந்தடியர் முன்புவரு வள்ளலைக் கள்ளலைக்கு [து
மலர்மகிழ்வனத்திலொருகுரவடியினமர்வள்ளிமணவாளனைக் காக்கவே.

முப்பத்து முக்கோடிதேவர். வேறு.

621. மனநெகிழ் தாக்கா தலத்துணைமுகிழ்த்துயர்த வத்திற்சிறப்பாய யாவரும் போற்றிட - மயில்வெரிந்மிசைக்கா தலத்தயிலெடுத்துலவு கொற்றப்புயத்தானை யாரணங்கூக்குர, லினமிடுபுபற்றிய தொடர்ச்சியினடக்கவுமவைக்கப் புறத்தானை மாறடுங்கூற்றனை - யெழில்கனிதாப்பொலி குறக்கொடி முலைத் துணைதினைத்துக்களிப்பானை வாரணநீட்டிய, சினமிகுகொடித்தலை வனைப்பணி வரைக்குமரி யற்பிற்றாப்போது சேயைவண்டார்த்தெழு - செழுநிறை மலர்த்தவி சிருக்கையயனைத்தலைபு டைத்துப்படைத்தானை வானமூங்காப்பொலி,கனகமதில்சுற்றிய புகழ்த்திருவிடைக்கழிவி ருப்புற்றிருப்பானை காடொறுந்தோற் றல்செய்-கதிரவருருத்திரர் மருத்துவர்வசுக்களொனு முப்பத்துமுக்கோடி தேவருங்காக்கவே. (கக)

க.—காப்புப்பருவம் முற்றிற்று.

# ௨ — செங்கீரைப்பருவம்.



622. விண்கொண்ட கோதண்ட மூதண்ட மதிர்தர விரைந்தொரு மலர்க்கைவாங்கி-மேவமற் றொருகையிற் றூர கணங்களவ் வில்லுண்டை யென்றுகொண்டு, கண்கொண்ட வானவர் கரஞ்சிரம் புயமுதற் கருதிலக் கிற்றெறித் துங்-காகோ தரந்திக் கிருப்பொருவ வாங்கியக் கனகவரை சுற்றியிர்த்து, மெண்கொண்ட பாற்கட றயிர்க்கட றயிர்க்கட லிலங்குபாற் கடனறியநீ-ரின்கட லுவர்க்கட லுவர்க்கட னளீர்க்கட லெனக்கூற மொண்டுபெய்துந், திண்கொண்ட விளைஞரொடும் விளையாடு மொருமதலை செங்கீரை யாடியருளே - செருவிடைக் குழகனரு டிருவிடைக் கழிமுருக செங்கீரை யாடியருளே. (௧)

623. மருத்தாய் கதிப்பரித் தேரிரவி விரவிமதி மண்டலத் துறவிடுத்து-மதியையவ் வாறிரவி மண்டலம் விடுத்துநெடு வானவ ருளம்புகுந்த, வெருத்தாயெழா தமைய மாதிரங் குடிகொண்ட வேதண்ட மெட்டுமொருமா - மேருவுங் கைக்கொண்டு தம்பியர்கள் பந்தாட வேணவா விற்கொடுத்தும், பொருத்தாய் திசைக்கரிக் கையொடுகை தெற்றியொரு பூண்விரற் கொடுசுற்றியும் - பூமுடியராவெடுத் தொளிமணிக் கதிரொன்று பொன்வரைத் தலையடித்துந், திருத்தாய் மகிழ்ச்சியுட் கொள்ளவிளை யாடுசேய் செங்கீரை யாடியருளே - செருவிடைக் குழகனரு டிருவிடைக் கழிமுருக செங்கீரை யாடியருளே. (௨)

624. மறைப்புற வனப்புமலி வடிவொன்று கொண்டுமொளிர் மறைவிடேமென் றுபற்றி - வழியோல மிட்டுத் தொடர்ந்திட நடந்துவயன் மருதமுங் கருதுகலுழித், துறைப்புற வழுங்கடந் தொள்ளருவி யிழுமெனத் தூங்குவிண் டடவுகுடுமித் - தொல்வரைச் சாரற் றினைப்புனஞ் சென்றுநேர் தோன்றுங் குறக்கோதைதன், கறைப்புற மருக்கடிய வொள்வே லனுக்குங் கருங்கணுஞ் செய்யவாயுங் - காமர்மற் றவயவமு மாதரங் குடிகொளக் கண்ணுறவிடுத்துணர்ந்தோர், சிறைப்புற மொதுங்கியுள நெக்குருகி நின்றவன் செங்கீரை யாடியருளே - செருவிடைக் குழகனரு டிருவிடைக் கழிமுருக செங்கீரை யாடியருளே.

625. மீறுறு பேரகழி யேழுமோ ரகழ்யென மேவநெய்த் தோர்விராவ-வேதாள பூதங்க ளாடமண் ணகமுழுது மேதினிப் பெயர்விளங்கக், காறுறு கற்பகக் காவும்யா வுங்கவர் கருந்தயித் தியர்குழாம்வெங் - களத்தெதிர்ந் தவிதரப் பொருதுமுன் றீராத கண்டுதி சிறிதொழிப்பா, ஞாறுறு வெள்வேலு மொள்வாளும் வென்றுமிக் கொளிர்கருங் கட்செய்யவா-யொருதெய்வ யானையிரு வெம்முலைக் கோடுகொண் டுழுதுழு துழக்குந் தோறுந், தேறுறு வட்டெழு கடம்பணி தடம்புயன் செங்கீரை யாடியருளே - செருவிடைக் குழகனரு டிருவிடைக் கழிமுருக செங்கீரை யாடியருளே. (௩)

626. நாவலங் கொடுசினந் தெதிர்பகை சவட்டுமொரு நான்முகக் கடவுளின்றே - நமக்கிறுதி நாளென் றயிர்த்துள நடுங்கவொரு நாரணனு மனையனுகப், பாவலம் படுசிறை மூளைத்தென உரைக்குலம் பார்முழுவ தும்படறக்கப் - பரவையே ழும்புடை பரந்தெழுந் தார்த்தொன்று பட்டலை யெறிந்துசிதறக்,

கோவலம் படுமுடுக் கணமெலாம் பொதிப்பச் சேகரித்துத் தெறித் தழுந்து. குலவுநீ யர்யகதிர் தோன்றுதல் வெளிப்படைக் கவியிற் சிறையடிக்குஞ், சேவலங் கொடியுடைக் காவலன் பாவலன் செங்கீரை யாடியருளே - செருவிடைக் குழகனரு டிருவிடைக் கழிமுருக செங்கீரை யாடியருளே. (௫)

வே று.

627. ஊறு மணத்தசெய் பூசிய முச்சிய ருச்சி யசையத்தாட
வொட்டிய திற்றனி கட்டிய சுட்டியு மொன்றாகின் வொண்மணிறும்
வீறு கலத்தெழில் சொட்டும் பொட்டும் விளக்க மிகுந்தாட
விண்ணக மண்ணகம் விற்கவு மமையா விழிசெறி குழையாட
மாறு தவிர்த்தொளி ரைம்படை யுஞ்சுடர் வாய்த்தவி ரரைஞாணும்
மற்றுடை மணியுஞ் சிறுகிண் கிணியும் மயங்கி யொலித்தாட
வாறு முகத்தொடு பொலியுங் குருபர னாடுக செங்கீரை
யாய விடைக்கழி நேய முடைக்குக னாடுக செங்கீரை. (௬)

628. மூரன் முகத்தெழு வேர்வு மணிச்சிறு முத்தி னிசைந்தாட
முச்சியின் முச்சியி னச்சிய பச்சை முழுப்பணி யுந்தாடச்
சூர னெருக்கமை காவென முற்றிச் சுற்றிய படையொடுசூர்
தொலைதர மலைதரு கிலைதரு பன்னிரு தோளு மசைந்தாடச்
சாரல் வரைக்குல மீர னடுக்கத் தகுவலி மார்புடனே
சந்த மிகுந்தவி ருந்தித் தொந்தி சரிந்து சரிந்தாட
வார லருந்திய பாலமு துண்டவ னாடுக செங்கீரை
யாய விடைக்கழி நேய முடைக்குக னாடுக செங்கீரை. (௭)

629. உள்ளுற ருக்குவ ளைக்கடல் விம்ம வுதிக்கு முவாமதியே
யுழுவற் பேரன் புடையரு ளிருளற வுதய மெழுங்கதிரே
துள்ளு தயித்திய ராய கடற்கொரு சுடுவட வைக்கனலே
தொழுதகை வானோ ராய பயிர்க்கரு டோன்ற வெழும்புயலே
புள்ளு மலர்ப்பொழி லமயப் பிடிதரு பொருவரு மழகளிறே
புண்ணிய நண்ணிய தண்ணிய ரண்ணிய பொங்கமு தச்சுவையே
யள்ளு முகத்த வயிர்கர வாண்டகை யாடுக செங்கீரை
யாய விடைக்கழி நேய முடைக்குக னாடுக செங்கீரை. (௮)

வே று.

630. சந்துவி ராய தனக்குற மாமயில் பங்கா மங்காத
தம்பியர் சூழ நடுப்பொலி நாயக கந்தா நந்தாது
கொந்துகு லாவு மலர்த்தரு வானவ ரெந்தாய் வந்தார்வாய்
கும்பியின் மேவு சிறைக்கள மோவவெ ழும்போ தம்போது
வந்துற வாமடி பற்றுமுன் யாவரு மஞ்சீர் வெஞ்சூரன்
வன்படை யோடு மடித்திடு வாமென விண்டாய் வண்டார்கட்
செந்துவர் வாயுமை பெற்றரு ளேயவ செங்கோ செங்கீரை
தெண்டிரை சூழும் விடைக்கழி மேயவ செங்கோ செங்கீரை. (௯)

631. நாமலர் பாமொழி தூமொழி யாரிடை நண்பா பண்பாளா
நான்மறை வேள்வியி னூடெழு மேடமு வந்தே றுந்தேவே
காமலர் தூவிய வாவிவி ராவிய டைந்தார் தந்தாயே
காமரு கானவர் மாமயி ரேள்புணர் கந்தா நந்தாதே
கோமலர் வானவ ரானவர் வாழுநி னைந்தாய் மைந்தாயே
கோமள மேவுமி ராறுபு யாசல துங்கா மங்காதே
தேமலர் மேயகு ராகிழல் வாழ்பவ செங்கோ செங்கீரை
சேவல்கு லாவுப தாகைம ணேகர செங்கோ செங்கீரை. (கல)

உ.—செங்கீரைப்பருவம் முற்றிற்று.



## ௩.—தாலப்பருவம்.

632. காரைத் தடையு மாளிகைமேற் காதன் மடவார் கணவரொடுங்
கலவார் புலந்து பறித்தெறியுங் கமல ராக மாலையுடுச்
சீரைத் தடையு மணிமாலை செறிந்து கதிரோ னுருட்டுபெருந்
தேரைத் தடைய வடைய வும்பொன் செய்த வம்மா ளிகைக்கீழ்வாட்
கூரைத் தடையுங் கருங்கணவர் குளிர்வீ தியினெற் கொறிக்கவருங்
கோழி யெறியுங் குழைசெறிந்து குமரர் களிப்பி னுருட்டுசிறு
தேரைத் தடையும் விடைக்கழிவாழ் செல்வா தாலோ தாலேலோ
செழுநான் மறையோ விடங்கருணைத் தேவா தாலோ தாலேலோ. (க)

633. கால்பாய் தடத்தி னகம்படிந்த கயவாய்ச் செங்கட் கருமேதி
கறித்துப் பலபூக் குதட்டியிளங் கன்றை நினைந்து பொழிதருதீம்
பால்பாய் கழனிப் பரப்பெங்கும் பாட்டுச் சுரும்பு விரும்புநெடும்
பைந்தாட் செந்தா மரையாதிப் பன்மா மலரும் படிசுவைச்சா
றேல்பாய் கரும்பு மரும்புசெறி யொண்பூங் கொடியு மாங்குயிலு
மோங்கு மருதப் பூங்கிளியு முறுதற் கேற்ப வெழுந்துபல
சேல்பாய் வளமை விடைக்கழிவாழ் செல்வா தாலோ தாலேலோ
செழுநான் மறையோ விடங்கருணைத் தேவா தாலோ தாலேலோ. (உ)

634. உரைசெ யுருவ முத்தரும்பி யொருங்கு நெருங்கு மரகதங்காய்த்
தொளிசெய் பவளம் பழுத்துநெடி தோங்குங் கமுகும் வீங்குநறும்
விரைசெய் சுவைமாங் கனிக்குலையும் வெய்ய புலிக்கால் விரற்பைங்காய்
மிகுகூன் குலைப்பைங் கதலிகளும் விழையுந் தழையுங் கழையுமலி
கரைசெ யொருமுப் புடைப்புடைய காய்த்தெங் குகளு மிந்திரன்செங்
கனக மணிமண் டபத்தமைபொற் கால்க டொறுஞ்சார்ந் தழகுசெயுந்
திரைசெய் பணைசூ ழிடைக்கழிவாழ் செல்வா தாலோ தாலேலோ
செழுநான் மறையோ விடங்கருணைத் தேவா தாலோ தாலேலோ. (௩)

635. பொருந்து கடவுண் மறைமுழங்கப் பொல்லா விருள்கெட் டுடைந்தோ
புண்ட ரீக முறக்குடையப் புட்கள் சிலம்ப வுதயவரை [டப்
பிருந்து வெளிக்கொ ளெழுபரித்தே ரென்றூழ் கதிரோ னெனுமொருபே
ரேற்பக் களம ருழுதுசெறும் பியற்றி நறுநென் முளைவித்தி

மருந்து நிகரின் புனல்பாய்ச்சு வார்ந்து கிளர்ந்து காட்டிநகதிர்
வளைந்து விளைந்து முதிர்ந்துவரத்த மார்த்தான் டனைமூடி விளமே
திருந்து கழனி விடைக்கழிவாழ் செல்வா தாலோ தாலேலோ
செழுநான் மறையோ விடுங்கருணைத் தேவா தாலோ தாலேலோ. (ச)

636. மாறு கடியும் வெள்ளிலைவேள் மாய்த்துக் கொடுங்கூற் றுடும்பொரவே
மடங்க லின்றி முடங்கல்விடு மைந்தோய் கருங்கட் செங்கனிவா
யேறு வளைமிக் கொலிமலர்க்கை யேழை மடவார் குழைமூத
லினிய விரையுந் துவருமளா யியைக் குளித்த நறும்பனிநீ
ருறு நறவ முவட்டெடுக்கு மொண்மா விகைத்தோட் காளையர்க
ளொருங்கு நெருங்கிப் பூசிடவாங் கொழிந்து கழிந்த சந்தனச்செஞ்
சேறு கமழும் விடைக்கழிவாழ் செல்வா தாலோ தாலேலோ
செழுநான் மறையோ விடுகருணைத் தேவா தாலோ தாலேலோ. (ரு)

வேறு.

637. எண்ணிய சத்தி பதித்தவர் முப்மல விருளற வெழுகதிரே
யெங்குந் தங்கும் பொங்குஞ் சுடர்விட் டெழுமுழு வொங்கொளியே
கண்ணிய விமையத் தமையும் பெண்மணி காதற் கண்மணியே
கட்டுக் கெட்டுப் பெட்டமை வாருட் கனியமு தச்சுவையே
மண்ணிய மணியிற் பொலியுங் குறவர் மடப்பிடி புணர்களிறே
வானவர் கோமக ளாய சகோரம வாவு முவாமதியே
தண்ணிய குரவமர் புண்ணிய குரவா தாலோ தாலேலோ
தமிழ்தெரி சங்கத் தலைமைப் புலவா தாலோ தாலேலோ. (சு)

638. உழையும் பிறகிடு கண்ணும் பண்ணு முவக்குஞ் சுவைமொழியு
முடையாண் மடவன நடையாள் குறவர்க் கொருமக ளாகியதாய்
குழையுந் தளிர்புரை செங்கையு மிணைதடி கொங்கையு மென்பதமும்
குளிர்மதி வெளிறுற வொளிர்திரு முகமுங் குலவத் தோய்ந்திடுவான்
மழையுங் கழையும் பொலிதரு மால்வரை மன்னுஞ் சாரலின்வாய்
வண்டு படாமலர் சாகை தொறுங்கொடு மருவிய வொருதருவே
தழையுங் குரவடி விழையுங் குரவா தாலோ தாலேலோ
தமிழ்தெரி சங்கத் தலைமைப் புலவா தாலோ தாலேலோ. (எ)

639. வீங்குஞ் சுவைபடு மூளை யருந்தி விராவுந் தடியிருண்
மென்று விழுங்குபு மண்டையின் மொண்டு மிகுஞ்சுடு வல்குடியா
வோங்கும் பசியெழ வாங்கு துணங்கையொ டுந்தி யெழும்பேயோ
டொண்டலை விண்டு சிவந்த கவந்தமு மொக்க வெழுந்தாடத்
தேங்குந் தகுவர் கருந்தலை மோதுஞ் செங்கள நடுவடுமோர்
சிங்கக் குருளை யெனப்பொலி வீரச் செல்வ செழும்பாவை
தாங்குங் குரவடி யோங்குங் குரவா தாலோ தாலேலோ
தமிழ்தெரி சங்கத் தலைமைப் புலவா தாலோ தாலேலோ. (அ)

வேறு.

640. நாத மகத்துவ வாயா தூயா மாயாவா
ஞாடர் முடிக்கணி பாதா போதா நீதாவோர்
சூத மடித்தெழு மாவா வேலா சீலாநீ
டோகை மயிற்பரி மோகா யோகா வேகாமா
மோத வமர்த்தெழு தாரா சோரா நீராதா
மோதரன் முற்பல ரேதே பேதே வீதேசேர்
மாதவ ருட்பொலி தேவே தாலோ தாலேலோ
வாவி விடைக்கழி வாழ்வே தாலோ தாலேலோ. (௯)

641. மந்திர மாயசொ ரூபா தீபா நீபாகா
மந்தவிர் வார்பவ நாசா வேசா வீசாயோ
தந்திர மேவிய யோகா வாகா வேகாவா
சந்திகழ் தேமலி தாமா வோமா நாமாவா
னிந்திர னாதியர் தேவே காவே பாவேபா
டென்றெனை யாள்குரு நாதா பூதா வேதாதாழ்
சந்திர சேகரர் பாலா தாலோ தாலேலோ
தண்குர வார்பொழல் வேலா தாலோ தாலேலோ. (௧௦)

௩.—தாலப்பருவம் முற்றிற்று.

# ௪.—சப்பாணிப்பருவம்.



642. மழைகொண்ட சிகரநெடு நேமிவா ளத்திஞெடு வாரிதிக ளேழுடு த்த-மண்ணகத் தமர்பலரும் விண்ணகத் தமர்பலரு மாருப் பவக்தொலைப்பான், குழைகொண்ட சுவைமருப் பொழிமலர் துவன்று நைபங் குரவடி யமர்ந்துகருணை-கூர்ந்தருள் புரிந்துவே தாகம புராணமுற் றோதில்பற் பலகலைகளும், பிழைகொண்ட வில்லெனை வுணர்ந்தவொரு நால்வரோ பிறவிதீர் வான்றழைந்து - பிறங்குகல் லாலடி யமர்ந்தருள் புரிந்தவெண் பிறைமுடிப் பெருமானினுக், தழைகொண்ட புகழ்நனி படைத்தமகிழ் குருபரன் சப்பாணி கொட்டியருளே - தன்னிகர் விடைக்கழிப் பன்னிரு புயாசலன் சப்பாணி கொட்டியருளே. (௧)

643. பந்தமிகு தெய்வப் பெருந்திரு மறைச்சிரம் பாடியாடித் தொடர நீள்-பங்கய மலர்ப்பதம் பார்மக டிலக்கப் பரிந்துவழி கொடுநடந்து, கந்தமிகு தாமரைக் கழனியுங் குழனிக் கருங்கான முங்கடந்து-கார்வரைச் சாரற் றினைப் புனம் புக்கெழில் கனிந்தகுற மங்கையாணி, வந்தமிகு பேரழகு நோக்கிமகிழ் தேக்கிநெடு மாதேவ னருளித்து - வந்திக் கவுங்குவி தராத,தம் பெருமையை மறந்துவிரை விற்குவிந்துருந், சந்தமிகு கைத்தல மலர்த்துணை முகிழ்த்தைய சப்பாணி கொட்டியருளே - தன்னிகர் விடைக்கழிப் பன்னிரு புயாசலன் சப்பாணி கொட்டியருளே. (௨)

644. தீதுபதி யாதகை லாயத் தளிக்குமுற் றிகழ்மணிக் கோபுரத்துட்-டிருவாய்தல் வைகியவ் வழியாற் றெழுமாதேகு திசைமுகனை யருகழைத்தம், கேதுபுரி வாயென வினவப் படைப்பே னியானென்ன மறைவருங்கொ-லென்ன வரு மெனவிருக் கோதுகென வோதுவா னியையமுற் குடிலையோத,வோதுகுடி

லைப்பொரு ளுரைத்துப்பி னுரையென வொருங்கலர் மயங்கநோக்கி - யொள் ளித ழுதுக்குபு நடுத்தலை புடைப்பமிக் கூறிப் புறஞ்சிவந்த, தாமரையி கைத்தளி ரகத்துஞ் சிவப்பவொரு சப்பாணி கொட்டியருளே - தன்னிகர் விடைக்கழிப் பன்னிரு புயாசலன் சப்பாணி கொட்டியருளே. (௩)

645. மால்வரை மறைக்கும்வெங் கேடகப் பரிகல மறித்துத் திருத்தி விண்ட-மண்டைமூ ழையின்மொண்டு மூளைப் பெருஞ்சோறு வாரிப் படைத்து மீது, பால்படு நிணப்பருப் பிட்டிழுது சொட்டும் பசுந்தடிக் கறிபடைத்துப் - பாவுநெய்த் தோர்நெய்யும் வாக்கிப்பல் பெண்பேய் பரிந்துப சரிப்பவாண்பே, யேல்வகை யருந்தியுடன் முற்றுவயி றுகமு ணியற்றில வியற்றிறனென் - றென் னிவை யக்கருந் தகுவர்செறி போர்க்களத் திளவே றெனப்பொலிந்து, சால் புடைய வெஞ்சிலை வளைத்தலைக முகிழ்த்தைய சப்பாணி கொட்டியருளே - தன்னிகர் விடைக்கழிப் பன்னிரு புயாசலன் சப்பாணி கொட்டியருளே. (௪)

646. கோலக் கருங்குழற் செவ்வா யுமாதேவி குளிர்மென் கவானிருந்து - கொங்கைக் குடங்கொட்டு பாலுணும் போழ்தினக் கொங்கைத் தடத்திரைுளி யே,காலச் சமைந்தசெழு முத்தவட முஞ்சுடர்க் கமலரா கத்தொடையுமொண் - கதிர்ப்பவள மாலையு மொன்றொடொன் றளவிக் கலந்திடச் சிக்காற்றியு, நீலச் செவிக்குழைப் பூட்டுக் கழற்றியு நெற்றியிற் பொட்டழித்து - நேயமிகு மலர் மாத ரிருவர்க்கு மொழியா நெடும்பணி திருத்துபணியே, சாலப் புரிந்திடு தளிர் க்கர தலங்கொண்டொர் சப்பாணி கொட்டியருளே - தன்னிகர் விடைக்கழிப் பன்னிரு புயாசலன் சப்பாணி கொட்டியருளே. (௫)

வே று.

647. தாரமை கொற்ற முடித்தலை வீரர் தடாவலி யிற்சூழத்
தானையொ டாகவ பூமியின் மேவிய தாரக னுடல்போழ்ந்தாங்
காரமை சேறு படாவகை நெய்த்தோ ரத்தனை யும்பருகி
யள்ளுபு மூளை யடங்கலும் வாய்ப்பெய் தலரி றுளுமென்று
னாரமை புரணி குதட்டி விழுங்கியு நலிபசி தீராமே
னாற்றிசை நோக்கி யினிச்செயல் யாதென நகுகடை வாய்க்குறுங்
கூரமை வெள்வேற் செங்கை முகிழ்த்துக் கொட்டுக சப்பாணி
கோல விடைக்கழி நீல மயிற்குக கொட்டுக சப்பாணி. (௬)

648. பிழையற் றவருட் கருளற நின்று பிறங்கும் பேரொளியே
பேச நினைக்கக் காண வினித்துப் பெருகுஞ் சுவையமுதே
விழையப் படுகவி புனைவா ரெய்ப்பு விடப்பொலி திரவியமே
வெள்ளி வரைச்சிந் தாமணி யணிமுடி மேற்கொளு முழுமணியே
கழையிற் சுவைபடு தெய்வப் பிடிதன் கலவைச் சாந்தும்விரை
கமழும் புழுகு மளைந்து மதர்த்தெழு காமரு கொங்கைமனங்
குழையத் தழையத் தழுவுங் கைகொடு கொட்டுக சப்பாணி
கோல விடைக்கழி நீல மயிற்குக கொட்டுக சப்பாணி. (எ)

வே று.

649. வழிவழி யடிமை யெனக்கொள் விருப்ப மனத்து வளர்ப்போயே
வழுவினு மொழிவற வொட்டி யிழுத்து மயக்க மறுப்போயே
மொழிமுத லியவொரு மித்த தவர்க்கருண் முத்தி கொடுப்போயே
முகிழ்நகை யிருவர் புணர்ச்சி மகிழ்ச்சியை முற்று முவப்போயே

பொழிசுவை நறவமு வட்டெழ விட்டொளிர் பொற்ற கடப்போயே
புனமயி லகவி மயத்து மடப்பிடி பொற்ப வளர்ப்போயே
சொழிதமி ழுணரு முதற்புல மைக்குக கொட்டுக சப்பாணி
குரவடி யமரும் விடைக்கழி யற்புத கொட்டுக சப்பாணி. (அ)

வேறு.

650. பரவப் படுமெய்த் தவருட் பொலிவாய் சத்திதரித்தோய்நீ
பவளத் தொடையற் புயவெற் பிறைவா முத்திமுதற்றேவே
யரவத் தணையிற் றுயிலச் சுதனே துற்றமறைப்பால
னடியைத் தலையைத் தெரிதற் சரியார் பெற்றவருட்சேயே
கரவத் தருவக் கலரைத் தடிவாய் வெற்புவிருப்பாளா
கடவித் தகரைத் திசையிற் றிரிவீ ரத்திறன்மிக்கோயே
குரவத் தடியிற் குலவற் புதவேள் கொட்டுக சப்பாணி
குருதிக் குடுமிப் பறவைக் கொடியாய் கொட்டுக சப்பாணி. (கூ)

வேறு.

651. மணமலிநீபா வளர்பிரதாபா வித்தகசுற்றேவே
வயமிகுவீரா வடிவகுமாரா பத்தபதக்கோவே
யணவுநர்நேயா வமரர்சகாயா பச்சைமயிற்பாகா
வழகியரூபா வசுரர்கள்கோபா செச்சைசிறத்தேகா
பணவரவாளா பரணைவைதோளா முத்தெனவுற்றோயே
பரிபவமாயா விரிதரவாயா வெற்கருள்சொற்கோவே
குணபரிபாலா குலவனுகூலா கொட்டுக சப்பாணி
குரவடியோமா தரமுறுநாமா கொட்டுக சப்பாணி. (கo)

ச.—சப்பாணிப்பருவம் முற்றிற்று.

# ரு.—முத்தப்பருவம்.

652. சூரன் முளைத்த கான்யாற்றுத் துறையும் பிறையு மிரிமருப்புத்
தும்பி யுணவு நம்பியழல் சுழல்கண் மடங்க லுழலிடமும்
வேரன் முளைத்த வெண்முத்து மிளிர்செம் மணியும் பதத்துறுத்த
விரைந்து நடந்து கடந்துநெடு விண்ணை் தடவு குடுமிவரைச்
சாரன் முளைத்த புனம்புகுந்து தையற் குறக்கோ மளக்கோதை
சமயந் தெரிந்து நேர்சென்று சலாஞ்செய் பொழுது முகங்கொடுக்க
மூரன் முளைத்த செந்துவர்வாய் முத்தந் தருக முத்தமே
முகைக்குங் குரவு விரவுதிரு முருகா தருக முத்தமே. (க)

653. வழிந்து கருணை யுவட்டெடுத்து மாநீ ருலகெங் கணும்பரவ
வடவா ளிழற்றென் பான்முகமாய் மருவி யமர்ந்து வெருவிமல
மழிந்து வெரிநிட் டிடைந்துடைந்தோ ரைந்து மகல வொருநால்வர்க்
கறிவித் தொருமூன் றிரண்டறுமொன் றறையா தறைந்த மாதேவ

னிழிந்து வணங்கு முனைநவலைக்கி விளக்கி யரு வேண்டுமென
விரப்பப் பரப்பு கருணைகரக் கெதல்லா முலையும் படியொருசொன்
மொழிந்து திகழுஞ் செங்கனிவாய் முத்தந் தருக முத்தமே
முகைக்குங் குரவு விரவுதிரு முருகா தருக முத்தமே. (உ)

654. சிலைப்பா லினியின் றெனத்தருவார் கிறைபே ரவையி லிருந்தொருகூர்
நெடுமூச் செறியுந் தொழுமலைக்கோ னிலை ஒருத்தார் புலால்கமழ
வலைப்பான் மடமா னனையவிழி வாலை காட்டு மடமாதர்
வண்ணக் கின்ன மாமுலையு மலர்க்கூந் தலுங்கல் விரைகமழ
விலைப்பான் மலர்ப்பா லொடுவேர்ப்பா லெல்லாங் கமழு முறங்கூந்த
லிமய முதவெம் பெருமாட்டி யின்னாக் தொடுமெய்ப் புழுகுகமழ்
முலைப்பால் கமழுஞ் செங்கனிவாய் முத்தந் தருக முத்தமே
முகைக்குங் குரவு விரவுதிரு முருகா தருக முத்தமே. (ங)

655. வித்த முவந்த பெயர்த்தகுவ வெய்யோ ரார்க்கின் டெழுமடங்கல்
வெறிகேண் டெழுந்த முழுமடங்கல் விரும்பி யுயிர்த்த பெரும்பழே
சுத்த முவந்த பேரவத்தைத் தோலா மேலா மாதவத்தர்
தூய யோக ராயர்சுகச் சுவையுண் முழுக சுவையிலவர்
சித்த முவந்த பேரொளியே தேவர் பெருமா னினிதீன்ற
சிறிய மருங்குற் பெரியமுலைத் தெய்வ யானை செம்பவள
முத்த முவந்த செங்கனிவாய் முத்தந் தருக முத்தமே
முகைக்குங் குரவு விரவுதிரு முருகா தருக முத்தமே. (ச)

656. எழுது புகழ்சால் பெரும்புலவ ரென்பார் பலரும் பின்பாக
விருந்து பொருந்து கரங்கள்விரித் தென்று வருமென் றேமாறத்
தொழுது வணங்கி முன்பிருத்தித் துதித்துப் பூசித் தறுமுகமன்
சொற்று முனிவ ருந்தமவிச் சுவையா ரமுதும் விரும்பாது
கொழுது வரிவண் டுழக்குகுழற் குறப்பெண் பாற்போய்ப் பசிவருத்தங்
கொடிதென் றோதி யிரந்தவள்கை கொடுக்குந் தேன்கூட் டியதினை
முழுது முவந்த செங்கனிவாய் முத்தந் தருக முத்தமே [மா
முகைக்குங் குரவு விரவுதிரு முருகா தருக முத்தமே. (ரு)

வேறு.

657. வெண்ணீ ரலைத்திருப் பாற்கடற் கண்டுயில் விறற்சக் கரப்படையி னன் - வியன்மார்பி லணியக் கவுத்துவப் பெயர்மணி விருப்பிற் கொடுத்துளாய் மற், றுண்ணீர்மை மிக்கசிந் தாமணியை யிந்திரற் குதவினுய் சூர்தடிந்தன்-பூற் றெழ வமுத்துநர்க் கின்பவள முழுதுதவு மொப்பிலா வியல்லையோ, பண்ணீர் மொழிக்கடைச் சியர்களை களைந்திடப் பண்ணைக் குலைக்கதுலவிப் - பார்த்துவரு தொழுவரிக் குதவுசா றடுகட்டி பற்பல வெடுத்துடைந்த,தெண்ணீர் மடைக்கிடும் விடைக்கழி புரப்பவன் செம்பவள முத்தமருளே-தேவர்க்கு மூவர்க்கும் யாவர்க்கு நாயகன் செம்பவள முத்தமருளே. (சா)

658. வெங்கட் கடுங்கொலைத் தருவரொடு பொருதாள் வெற்றிவேல் புக்குழக்க - வீறழிந் ததுவேலை மற்றத னெடும்புணர்வன் மீனமீ னிப்பிவளை கார், திங்கட் செழுங்கலையு மன்னவொண் கன்னலுஞ் செந்நெலுஞ் செழுவாழையுஞ் - செந்தா மரைக்குலமு மற்றுமப் பாவைநீர் தேக்கியுயிர் வாழுமைய, வங்கட் புவிக்கணிவை யீனுமுத் தங்கொளே மாயிர முகக்கங்கைசா - லவிழுத்த முங்கொளேங் குவிமுத்த மாமுலைய ராடுநீர் பாயவிண்மேற், செங்கட்க ருமபெழும் விடைக்கழி புரப்பவன் செம்பவள முத்தமருளே - தேவர்க்கு மூவர்க்கும் யாவர்க்கு நாயகன் செம்பவள முத்தமருளே. (௭)

659. தோணுறு தொங்கற் பெருந்தேவர் மோலித் தொகைக்குமேற் பட்டொளிவிடுங் - தூயவேய் முத்தமு மவாவியது மூன்னமுன் னுண்டைவாய் முத்தமொன்றே, வாணுறு கண்ணியர் மணிக்குழை யசைந்தாட மாமுலை யணிந்த முத்த - வடமாட நுண்ணிடை தளாடவிள மைந்தர்த மனத்தோடு மூசலாடுங், சோணுறு பொங்கரிற் பாணுறு காலுழக் குலமல ருகுத்ததாது - குரைகடற் சேதுவிற் பொங்கியிரு கரைமேற் குதித்துநீ ரோடனாப்பட், சேணு றடைத்திடும் விடைக்கழி புரப்பவன் செம்பவள முத்தமருளே - தேவர்க்கு மூவர்க்கும் யாவர்க்கு நாயகன் செம்பவள முத்தமருளே. (௮)

வேறு.

660. எழுதரும் வடிவழ குடையவ விடையவ னிச்சைசெய் புத்திரனே
யிமையவர் மடவியர் விழியளி குடையுமி ணர்த்தக டப்பணிவோய்
பழுதக னெறிபுகு மவருள நிறுவிய பற்பப தத்திறைவா
பலதலை யரவுயி ருலைதர வுலவுப சுத்தமயிற்பரியா
யொழுகொளி மரகத முழுமணி வடிவவு மைக்கொளிர் கட்டிணையூ
டொளிர்மணி யெனவழி படுமடி யவருளு வக்கு முயிர்த்துணையே
முழுதுல கமுநவில் சரவண பவகுக முத்த மளித்தருளே
முனிவரர் தொழுகுர வடியமர் குருபர முத்த மளித்தருளே. (௯)

வேறு.

661. மதியு நதியு மணியு மொருவர் மகிழ நிகழு மத்தனே
வலிய குறவர் பொலிய வுதவு வடிவ மகள்வ சத்தனே
நிதிய மெனவு ணினையு மடியர் நிறைய வருளு மத்தனே
நிமலை யிருகண் மணியொ டுலவி நிலவு மறுமு கத்தனே
கதிய மயிலொண் முதுகி லுதய கதிரி னமர்ச மத்தனே
கமழு நறிய புழுகி னளறு கலவி யொளிர்பு யத்தனே
முதிய கருணை பொதிய வளரு முதல்வ தருக முத்தமே
முகைய தகைய குரவு விரவு முருக தருக முத்தமே. (௧௦)

௫.—முத்தப்பருவம் முற்றிற்று.

# ௬.—வாரானைப் பருவம்.



662. ஏர்கொண்ட நெற்றியிற் சுட்டியும் பட்டமு மெழில்சொட்ட விட்ட பொட்டு - மெட்டுத் திசைக்குமொளி விட்டுப் பரப்புமிலை யில்லா மணிக்குழைகளுந், தார்கொண்ட வைம்படையு மொய்ம்படையும் வலயமுஞ் சாற்றுமுன் கைக்கடகமுந் - தாவாம தாணியு மிளங்கதிர் விளங்கவொளி தழை மூர ணிலவெறிப்பப், பார்கொண்ட சித்ரபு புனைபுஞ் சிலம்பும் பருஉமணிப் பொற்றண்டையும் - பரவுஞ் சதங்கையுங் கிண்கிணியு மன்குளிர் படைப்பக் கலின்கலினெனச், சீர்கொண்ட மறைமுழுமை யுக்கொடர்ந் தோலிடச் சிவ பிரான்மகன் வருகவே - செந்தமிழ் மணந்தழை நடைக்கழி விடைக்கழித் தெய்வநா யகன்வருகவே. (க)

663. நாவடி மறைக்குமுத லோதியத னுட்பொரு ளையந்துணர் வுறுத பிழையா - ஞன்முகன் முடித்தலை நடுங்கப் புடைத்துக்கைக் குகாய்ப் படைத்த தன்றிப், பூவடி யருந்திவண் டடைகிடக் குங்குழற் பூரண வுமாதேவியார், பொலிதரு மடித்தல மிருந்திளங் கொங்கையிற் பொங்குபா லுண்டிடும்போ - தூவடி முனைச்சூல பாணியார் திருமார்பி லுற்றமுன் சொற்றபிரம - னுண்டலைப் பெருமாலை சிக்குண்டு புரளா வுருண்டிட வுதைந் துதைந்து, சேவடி யினுங் காய்ப் புரக்கொண்ட திண்டிறற் செல்வப் பிரான்வருகவே - செந்தமிழ் மணந் தழை நடைக்கழி விடைக்கழித் தெய்வநா யகன்வருகவே. (உ)

664. ஆராத காதலி னணைக்குமொரு தம்பிரா னங்கைத் தழற்கொழுந்தி - னவிர்சடை மதிப்பிறைக் கோணலை நிமிர்த்திடற் காய்ந்துட னெடுத்து வாட்டச், சோராத மற்றதுமெய் சோர்ந்தமுத முற்றவுஞ் சொட்டவிட வதுபடிந்த - தூவரை யுடைப்புலித் தோலுயி ரடைந்தெழீஇத் தோகைகொடு மண்புடைக்க, வேராத மெய்நடு நடுங்கிக்கை நின்றுகிழ் வீழ்ந்தெழுந் தோடுமானை - மேவிப் பிடித்தொருகை யேந்திவா லோர்ந்துநீ மேவுநா னேயென்றவன், நீராத பேருவகை தேக்கச்செய் மழவிளஞ் சிறுகுறும் பன்வருகவே - செந்தமிழ் மணந்தழை நடைக்கழி விடைக்கழித் தெய்வநா யகன்வருகவே. (ங)

665. கந்தையடு கரடக் களிற்றுரிவை போர்த்தமுக் கட்பெரும் பரமனுரங் - கைத்தலத் தமர்மா துளங்கனி பறித்துளங் கனியக் கழுத்துநீட்டுந், தந்தையுறழ் சிற்றிடைத் தாயார் திருக்கைத் தனிக்கிளி தனக்குதவியுந் - தாயார் திருக்கைத் தடஞ்சிலையின் மேற்பொலி தழைத்தோகை கொய்தெடுத்து, முந்தைமறை நாடரிய தந்தையார் கைக்கணமர் முதுமா னுணக்கொடுத்து - முறையினித் தகையபல செய்தெய்து தற்கரிய முதுகுரவ ரிருவருக்குஞ், சிந்தைமகிழ் பூப்பவெதிர் நின்றுவிளை யாடுமொரு செல்வப் பிரான்வருகவே - செந்தமிழ் மணந்தழை நடைக்கழி விடைக்கழித் தெய்வநா யகன்வருகவே. (ச)

666. வெவ்வாய் முடைத்தகுவர் மேவுங் களத்திலவர் மேனிநெய்த் தோர்பரந்து - மீதலை யெறிந்திட வெருக்கொண்டு மற்றவர் விடக்குநிண மீருள் பலவுங், கவ்வா யிரம்பெரும் பேய்களச் செம்புனல் கடப்பதற்கெண்ணி யனையார் கைவிட்ட கேடக மறத்துக் கிடத்திக் கலந்தது லிவர்ந்துமாண்ட, வவ்வாய் கரி

பிணங் குடர்கொடு பிணித்துமற் றதன்மே லிவர்ந்துமன்று - ரங்கைக் கழுக் கடை யெடுத்துந்தி யிதமிதவை யதுபரிசு காணுமென்னச், செவ்வாயின் வெண் ணகை யரும்பப் பெரும்போர்செய் சிறுகுமா ரன்வருகவே - செந்தமிழ் மணந் தழை நடைக்கழி விடைக்கழித் தெய்வநா யகன்வருகவே. (௫)

வே று.

667. நாலைக் கதிர்நுண் மதிகொண்டு நுனித்துள் ளுணர்தற் கருள்சாலா
சோலா வினையேம் பவக்கடலு நானங் கடந்த வுயர்க்கடலு
மாலைக் கதிரி னுடைகழைபோ லண்ட முடைக்கும் பெருமலையு
மடியேம் பாசக் கருமலையு மடியத் தொழியக் கடியுற்ற
மாலைக் கதிர்வேல் வலங்கொண்ட வள்ளா லுள்ளால் விடங்காந்த
வைவாட் டுளைப்ப லரவனுக்கு மயில்வா கனத்தின் மீமிசைப்பல்
காலைக் கதிரிற் றோன்றுமிளங் காளாய் வருக வருகவே
கழியா வளங்கள் பொழியும்விடைக் கழியாய் வருக வருகவே. (௬)

668. பணியா வழுத்தும் பேரன்பர் பவசா கரத்திற் கொருவடவை
பற்றற் றவரே பற்றகலப் பற்றும் பிரம முற்றுகுணங்
குணியா வையுமா யல்லவுமாங் கோதின் முதலென் றெடுத்துமறை
குலவ வுனையே நாணுளுங் கூறு மதுவுங் குறியாய்போற்
றணியா மோகந் தலைக்கொண்டு சாரற் புனத்து வேராலுகு
தாளப் பரல்கா லுறுத்தவுறீஇத் தையற் குறவர் கொடியின்பங்
கணியா முளைத்துத் திளைத்தவிளங் காளாய் வருக வருகவே
கழியா வளங்கள் பொழியும்விடைக் கழியாய் வருக வருகவே. (எ)

669. தோட்டுக் கமலத் தவிசுறையுந் தோன்றற் கியற்றமுடியாத
தோலா வனப்புச் சுமந்தகுறத் தோகை துணைத்தோ டோய்ந்திடுவான்
வேட்டுப் புகுந்த வொருபொழுது வேடர் பெருமான் வேட்டைவினை
விழைந்தாங் கடையப் பயந்தாய்போல் விருத்த வுருவந் தரித்துமொரு
கோட்டுக் கரடக் களிற்றையிரு கோட்டுக் கிளிரு வரப்புரிந்துங்
குலவு பாயா வேங்கையுருக் கொண்டு மின்னும் பலசெய்து
காட்டுப் புனத்து மகிழ்ந்தவிளங் காளாய் வருக வருகவே
கழியா வளங்கள் பொழியும்விடைக் கழியாய் வருக வருகவே. (அ)

670. விண்ணே வளியே யொளியழலே விரியும் புனலே மேதினியே
வெளிய மதியே செங்கதிரே மேய வுயிரே யுயிர்க்குயிரே
பண்ணே பண்ணி னுடனமையும் பாட்டே பாட்டி னுட்பொருளே
பகரா றாறுக் கப்பாலாம் பரமே பரவு வார்வரமே
யெண்ணே யெண்ணின் மறைக்கொழுந்தே யெண்ணி யெழுதற் கரியபுக
ழேறே யிமையோர் பேறேநன் னிமைய முயிர்த்த பெருமாட்டி
கண்ணே கண்ணுக் கினியவிளங் காளாய் வருக வருகவே
கழியா வளங்கள் பொழியும்விடைக் கழியாய் வருக வருகவே. (கூ)

671. மணியே மணியி னுள்ளொளியே மலரே மலரி னுண்மணமே
மதியே மதியி னுட்கலையே மாணப் பொலியு முதுகுரவர்க்
கணியே யெங்க ளாருயிரே யாரா வின்பப் பெருக்காறே
யாறு றினுக்கு மப்பாலே யப்பான் மையினின் றொளிர்முதலே

பணியே யமையப் பணிபவர்தம் பாவின் றகலாப் பரம்பொருளே
பரமா னந்தப் பெருவாழ்வே பற்றிக் கொடிச்சி தழுவுந்தெய்வக்
கணியே யழகு கனிந்தவிளங் காயாய் வருக வருகவே
கழியா வளங்கள் பொழியும்விடைக் கழியாய் வருக வருகவே. (௧௦)

௬.—வாரானைப்பருவம் முற்றிற்று.

## ௭.—அம்புலிப்பருவம்.



672. புற்புத வலைக்கடல் கலங்கியோ ரிடைவெழூஉப் பொலிசத்தி யுடைமையானும் - புண்ணியக் கலைபல விரித்துநீர்க் குவலயம் பொலிதர மலர்த்தலானுங், கற்புதவு வண்ணமலை யாகவொளிர் தாரா கணப்பா லுவத்தலானும், காமனழ குக்குடை கொளப்பெரு கிராமக் கலந்துன்னை வெழுதலானும், வெற்புதவு மங்கைகான் முளையெனப் பரமர்முடி மேற்கொளத் தோன்றலானு-மேதகு தனக்குநிக ராயினை யென்றுனை விளித்தன னளித்தவர்கட்கு, நற்புத விடைக்கழி யுடைக்குமர நாயகனொ டம்புலீ யாடவாவே - யாரணம் புகல்புவன காரணன் காணிவனொ டம்புலீ யாடவாவே. (௧)

673. வில்லடு நுதற்றிருச் செய்யதா மரையாள் விழைந்தகோ லங்கொடுத்தும் - வெய்யவன் செயல்யாவும் வீழ்க்கொழிய வேலைமே லிக்காங் கொண்டெழுந்து, மல்லடு வலத்தம் புயங்குழைய வாம்பலை மணந்துதழு விப்புணர்ந்தும்-வானகங் குடிகொண்டு தண்ணளி சுரந்துயிர் வளப்பயி ரெலாம்வளர்த்தும், புல்லடு முடைப்பரம னார்நயன மலரப் பொலிந்துவெளி வந்துமெங்கள் - புண்ணியத் தெய்வக் கொழுந்தினை நிகர்த்துளாய் பொன்மாட மணியுலகுகு, நல்லடும் விடைக்கழி யுடைக்குமர நாயகனொ டம்புலீ யாடவாவே - யாரணம் புகல்புவன காரணன் காணிவனொ டம்புலீ யாடவாவே. (௨)

674. நாடுபதி னாறுகலை யுடையனீ யறுபத்து நான்குகலை யுடையனிவனே - நண்ணுசிறு மானேந்தி நீயிவ னிளங்கோக்க ணாடுபெரு மானேந்திகாண், கூடுமுய லொன்றுடைய னீயிவ னளாவிளங் கோளரிக ளொன்பதுடையான் - கொண்டாடு பறவையொன் றுடையனீ யிவனவனி கொண்டா டிரண்டுடையனாற், பாடுமொரு குண்டலம் பொலியவரு வாய்நீ பரந்துபனி ரண்டுபொலியும் - படிவருவ னிவனிவனை நீயொப்பை யென்றெப் படிப்பகர லாமூர்வலன், றுடுகொள் விடைக்கழி யுடைக்குமர நாயகனொ டம்புலீ யாடவாவே - யாரணம் புகல்புவன காரணன் காணிவனொ டம்புலீ யாடவாவே. (௩)

675. வருணமொன் றுடையைநீ யாறுடைய னிவனோடி மறைவைநீ மறையானிவன்-மாறாத வெண்மதிக் கடவுளை நீசெம் மதிக்கடவு ளாயிவன்று, னிருணயந் தெழுவைநீ யொளிநயந் தெழுவனிவ னியலுநீ பலதன்மையா - னொற்றைக்கு மொருதன்மை யானிவன் கயரோகி யேநீ நிராமயனிவன், றெருணல மளித்திடாய் நீயடைந் தார்நலஞ் சேர்தர வளிப்பானிவன் - றெளிதா நினைக்கநிக ரெங்ஙன்பெரு மானெனச் செப்பவேண் டுங்கொலோவா, வருதணய விடைக்கழி யுடைக்குமர நாயகனொ டம்புலீ யாடவாவே - யாரணம் புகல்புவன காரணன் காணிவனொ டம்புலீ யாடவாவே. (௪)

676. பாராய் தரப்பொலியும் வேதாக மங்கணனி பகர்குறி குணங் கடந்து - பாராத பரவிந்து வுங்கடந் தோங்கொளி பரப்பியொளிர் பரமயோகி, சீராய் முடி த்தலை வணங்கமெய்ஞ் ஞானோப தேசமுன் செய்தசைவத் - தெய்வ ஞா னுசாரி யன்கா ணிவன்பெருஞ் சீர்மைக்கு வழிவருவசத், ரோய் பெருங் குரவன் மனையைப் புணர்ந்தபழி யுற்றவிட னுயகின்சீ-ரொக்குமென லெங்கள் பெரு மட மையல் லாதுவே றுண்டுகொ லொருந்துலகமுந், ஞாய் விடைக்கழி யுடைக்குமர நாயகனொ டம்புலீ யாடவாவே - யாரணம் புகல்புவன காரணன் காணிவனொ டம்புலீ யாடவாவே. (ரு)

677. வளியார் பெருங்ககன நடுவட் பொலிந்துநீ வருபொழுது கமுது மஞ்சும் - வல்லிருள் விழுங்கிய தெனக்கரும் பாம்பொன்று வந்துனை விழுங்கு மப்போ, தொளியா ருனைப்பறி கொடுத்திழந் தோமென் றொருங்குலக நீருண் முழுகி - யுறுபசியின் வாடுநீ யுற்றதுய ருன்னோ டொழிந்ததிலை நன்குணர்தி யாற், களியார் செருக்கர வொருங்கஞ்ச மயில்வா கனப்பிரா னருகடைந்தாற் - கருதுனக் கெத்துன்ப முண்டுபுக லின்பமெது கலவாது புலவாதுபே, ரளியார் விடைக்கழி யுடைக்குமர நாயகனொ டம்புலீ யாடவாவே-யாரணம் புகல்புவன காரணன் காணிவனொ டம்புலீ யாடவாவே. (சு)

678. ஏடுறு மலர்க்கணை தொடுத்தகரு வேளுட லெரிக்குணவு செய்த பெருமா - னெழிினுதற் றனிவிழி வனப்பனை யழித்தனை யெனப்புவி யுரைக் கும் வசையொன், றேடுறு விதம்பெரு லம்பொழி தரத்தர வுதித்தசெவ் வேளி வன்கா - ணுருவிழக் தவனுரைக் கும்பணி யவாவிழ லுதவுகுடை யாயினுய்நீ, வாடுறு வருத்தமல குக்கொழிக் குங்கருணை வள்ளல்வா வென்றழைக்கின் - வாரா திருக்கவிதி யுண்டுகொன் மணிக்கோயில் வாரணக் கொடிவான்கிழித், தாடுறும் விடைக்கழி யுடைக்குமர நாயகனொ டம்புலீ யாடவாவே - யாரணம் புகல்புவன காரணன் காணிவனொ டம்புலீ யாடவாவே. (எ)

679. தடையா வலிப்பரமர் திருமுகக் கண்ணுய்த் தலைப்பெருங் கல மாய்நலக் - தழைமேனி யெட்டுளொன் றுயவர் நடாத்துந் தனித்தேர்ப் பதத்து ளொன்று, யுடையா மகிழ்ச்சியி னமர்ந்துநீ பெற்றபே றுள்ளன வெலாமிவன் பா - லுற்றொரு கணப்பொழுது கூடிவினை யாடலா லுண்டாகி யுலகுகுறுக, மிடையா வரும்பேற்றி லாயிரங் கூற்றில் விரும்புமோர் கூறுவாதான் - மெய் மையிது காணிந்த மந்தண முணர்ந்துவிதி வீதரும் போதுமிறுதி, யடையா விடைக்கழி யுடைக்குமர நாயகனொ டம்புலீ யாடவாவே-யாரணம் புகல்புவன காரணன் காணிவனொ டம்புலீ யாடவாவே. (அ)

680. பொருநன்சால் பொகுட்டிதழ் மலர்த்தவிசி னுன்முகப் புத்தேண் முதற்புலவரும் - பொதிபுல னடக்கியொரு நெறியுறு வசிட்டன்முற் புண்ணி யத் திருமுனிவரும்,வெருள்சான் முனைத்தலைய வேற்கைமுசு குந்தனெடு வேந் தன்முற் பலவரசரு - மேவிப் பணிந்துனைத் தெண்ணிய தடைந்தவிம் மேதகு தலத்தடைந்தாற், கருள்சால் களங்கமு முளங்கவலு மாதக் கனுரிட்ட சாப முந்தண் - கடவுண்மா குரவர்க் கியற்றுபா தகமுங் கழிந்துய்யும் வழியுண்டு கா, ணருள்சால் விடைக்கழி யுடைக்குமர நாயகனொ டம்புலீ யாடவாவே - யாரணம் புகல்புவன காரணன் காணிவனொ டம்புலீ யாடவாவே. (கூ)

681. மனியார் கடற்கனெழு மின்னையொரு பொருள்செய்து வருதி யென் றெம்பிரான்செவ் - வாய்மலர்ந் தருளவு மென்கொல்பா ணித்துநீ வாரா திருந்தனை பெருங், கணியார் பொருப்பைக் கலக்கிய முனைத்தலைக் காலவேல் கையுண்டுகாண்-கருதுமதன் வலிநீ யுணர்ந்திலா யேனும்விண் கரைவது முனை

ர்க்கிலாயோ, பணியார் முடித்தலை துளக்குமவ் வேலெதிர்ப் படவுநீ யொரு
பொருள்கொலோ - பரமகுரு சாமியிவன் றனியிருமையா யாதரிப் பாரெவர் பசும்
பொனுலகி,னணியார் விடைக்கழி யுடைக்குமர சாமியொடு மம்புலீ யாடவாவே.
யாரணம் புகல்புவன காரணன் காணிவனொடு மம்புலீ யாடவாவே. (கo)

எ.—அம்புலிப்பருவம் முற்றிற்று.

## அ.—சிற்றிற்பருவம்.

682. மறையோ மறையி னொருமுடிவோ வான்றோய் குடுமி வரையுதித்த
மங்கை யுமையாள் மடித்தலமோ மாறா வன்பர் மனக்குளிர்பூந்
துறையோ சிறியேம் விளையாடத் தொகுதே மருக மருவடிக
டோயப் புரிந்த தெத்தவமோ தோத்ற மூவர்தேன் மூத்தமுதம்
கறையோ வரிய வடிவேற்கைக் காளாய் பகரா குலசேகா
கருணை நிதியே காமருதேன் கமலப் பொகுட்டி னறுமலர்யோற்
சிறையோ திமஞ்சேர் விடைக்கழிவாழ் செல்வா சிற்றில் சிதையேலே
சிந்திப் பவருள் ளூறமுதத் தெளிவே சிற்றில் சிதையேலே. (க)

683. கோலம் பொலிய நீராட்டிக் குலவு துகில்கொண் டீரமணித்து
குளிர்நெய் தடவி நறுங்குஞ்சி கோதி முடிந்து மையொடுபொட்
டேலம் பொலியுங் குழலுமையா ளிட்டுப் பலபூ ணணிந்துகனி
யெழிற்க போலங் கிள்ளுபுமுத் திட்டுப் பெட்டு வெளிவிடுத்த
தோலம் பொலியு மணிவீதி யொருசா ரடு மெளியேங்கட்
குறுபே ரிடுக்கண் புரிவதற்கோ வுனது பெருமைக் கிதுதகுமோ
சீலம் பொலியும் விடைக்கழிவாழ் செல்வா சிற்றில் சிதையேலே
சிந்திப் பவருள் ளூறமுதத் தெளிவே சிற்றில் சிதையேலே. (உ)

684. எங்க ளுமையா ளருமருந்தே யென்று விளித்துப் புனைந்துவிளை
யெய்த வெளியில் விடுத்தனளிவ் வெளியார்க் கிடுக்கண் புரியென்றோ
வங்கள் வழிதார்க் கருங்கூந்த லனையா ளிவரு திருமேனி
யடங்கப் புழுதி படிந்ததுகண் டாற்று வாள்கொ லொருநான்கு
கங்க ளுடையான் முதற்றேவர் கன்னு முகமு மணிமுடியுங்
கையும் புழுதி படுமஃதுட் கருதி விலக்கி யமைதிமேற்
றிங்க டவழும் விடைக்கழிவாழ் செல்வா சிற்றில் சிதையேலே
சிந்திப் பவருள் ளூறமுதத் தெளிவே சிற்றில் சிதையேலே. (ஈ)

685. அழிக்குந் தொழிலன் றந்தைதொழி லதனை யியாமு மருபுரித
லறனே யெனின்மற் றொருநான்கு மார்செய் தொழிலெங் களுக்குனை
கழிக்கு மறிவு மிளைப்பாற்று கருணை யெம்பா லுற்றுமறை
கரிநீ யியற்றுந் தொழிலுனெங் களுக்கு மிகவு மிளைப்பேற்றுங் [த்தி
கொழிக்குங் கருணைப் பெருக்காறே கோதி லறத்து குன்றே
குலவு மமரர் குலக்கொழுந்தே குரவ கிழவி குளிர்குருந்தே
செழிக்கும் வளமை விடைக்கழிவாழ் செல்வா சிற்றில் சிதையேலே
சிந்திப் பவருள் ளூறமுதத் தெளிவே சிற்றில் சிதையேலே. (ச)

686. மேவி யுலகை முழுதழிக்கும் விமலன் மகன்யா மென்றெளியேம்
விரும்பி வருந்தி யியற்றுசிறு வீட்டை யழிப்பா யனையபிராற்

காவி யனைய பெருமாட்டி யண்ட முழுதுஞ் சிறுவீட்டென்
றாக்கி மகிழ்வா ளவண்மகளி யலேயோ வனையாண் மகனென்று
பாவி யேங்கள் சிறுவீட்டைப் படைக்கு மாறே பணித்தேகிற்
பழியுண் டாமோ பொழிசுவைத்தேம் பங்கே ருகமென் மலர்மேற்சீ
தேவி மகிழும் விடைக்கழிவாழ் செல்வா சிற்றில் சிதையேலே
சிந்திப் பவருள் ளூறமுதத் தெளிவே சிற்றில் சிதையேலே. (௫)

687. கண்ணீர் பெருக வுருகியுனாங் கசிந்தின் னடியார் மலமாயா
கன்ம முழுதுஞ் சிதையவர்முற் கழிய வினையைச் சிதையவர்த
மெண்ணீர் பிறவிக் கணக்கெழுதா வேட்டைச் சிதைநீ யேபரமென்
றெண்ணு திழுதை யுறுமனைக ரெண்ணுஞ் சிதைமற் றினைதவிர்த்து
புண்ணீர் கவரும் வடிவேற்கைப் புலவா புலவர் போரேறே
பொறியி லேஞ்சிற் றிலஞ்சிதைத்தல் புகழோ வலது புண்ணியமோ
தெண்ணீர் வளங்கூர் விடைக்கழிவாழ் செல்வா சிற்றில் சிதையேலே
சிந்திப் பவருள் ளூறமுதத் தெளிவே சிற்றில் சிதையேலே. (௬)

688. சொன்மா மறைக்கும் பெருந்தேவர் தொகைக்கு நறுங்கற் பகத்தாமஞ்
சூடு முடிவா னவனுக்குஞ் சூட்டோ திமமூர் பிரமனுக்கும்
பன்மா மூரல நறவிரைக்கும் பசுந்துழாய்ப் பூந் தாமனுக்கும்
பன்மா தவர்க்கு மற்றையர்க்கும் பற்றும் கரிய சிற்றடிகள்
பொன்மா மணியும் வெண்முத்தும் போற்றி யாங்க ளாடிடத்துப்
புழுதி பற்றற் கெளியவாய்ப் போந்த திறம்பூ தோபிற்தோ
சென்மா மதிலசூழ் விடைககழிவாழ் செல்வா சிற்றில் சிதையேலே
சிந்திப் பவருள் ளூறமுதத் தெளிவே சிற்றில் சிதையேலே. (௭)

689. அன்று கயிலைப் பருப்பதத்தி லழகோ லக்கத் தினிதமர்ந்த
வருள்சா னுந்தை யிருசரணு மடைந்து பிரமன் மான்முதலோர்
நன்று வரம்வேண் டியதமரா ரொடு கெழுத்த சூர்முதலோர்
நல்லார் விரும்பு பெருவீடு ளிதற் கொருசே யுதவன்றே
கன்று செறிகை யிளநலலார் கருதி விரும்பு சிறுவீடு
கழியப் புரிசே யுதவென்றே கரையாய் வரையாள் கண்மணியே
சென்று பலர்சூழ் விடைக்கழிவாழ் செல்வா சிற்றில் சிதையேலே
சிந்திப்பவருள் ளூறமுதத் தெளிவே சிற்றில் சிதையேலே. (அ)

690. மையா ரின்ற சிறுமருங்கு னங்கை யுமையாள் பரமனொடு
நறுநீர்ப் பொய்கைத் தடங்கரைவாய் நண்ணி முகமா றினுக்கேற்பக்
கையா றிரண்டு புரிந்ததுபோற் காலா றிரண்டு செய்யாது
கருதி யிரண்டே செய்தனன்முற் கடையேஞ் செய்த நல்வினையான்
மெய்யா விரண்டா யிருந்துமவை விளைக்குங் குறும்பு பொறுக்கரிதாய்
விளைந்த தினியாஞ் செயலென்னே வீடு தோறும் விடாதமர்ந்து
செய்யாண மகிழும் விடைக்கழிவாழ் செல்வா சிற்றில் சிதையேலே
சிந்திப் பவருள ளூறமுதத் தெளிவே சிற்றில் சிதையேலே. (௯)

691. ஆர்வார் புனல்வெண் பிறையரவ மணிந்த சடைமா தேவனுக்கு
மகில மீன்ற வுமைபவட்கு மருமை மகனீ யருவினைக
ளீர்வார் விரும்பு நின்வரவின் கெய்தப் பெற்றே மெளிதாக
வெளியே மதற்குக் கைம்மாறென் றியற்ற நினைந்தேம் வேறுணரேம்
பார்வார் மணற்சோ றுள்ளினிது படைப்பே மடிகட் கதுகுறவர்
பாவை படைத்த மாவாமோ பன்னூல் கருமுக் குற்றமறத

தேர்வார் செறியும் விடைக்கழிவாழ் செல்வா சிற்றில் சிதையேலே
சிந்திப் பவருள் ளூறமுதத் தெளிவே சிற்றில் சிதையேலே. (௧0)

அ.—சிற்றிற் பருவம் முற்றிற்று.

# ௯.—சிறுபறைப் பருவம்.

692. ஒந்தமிழ வாதபூ மேற்றேவர் புரிமகக் கனலொருத் தறமுழங்கக்-
காலாதி யுண்டுபொறி கட்டமர் தவர்வாய் கலந்தவா சிகமுழங்க, விந்தமிழ்
தராதெழும் போதுகடல் போலற மெழுந்தமே கங்கண்முழங்க - விடியுண்ட
வாளரவி னேங்கிமற முழுதுமினி யென்செய்து மெனமுழங்க, எந்தமிழ் திரு
க்குமிட மாயவம ராவதியி னென்மனைப் பறைமுழங்க-எம்மருண் முதறீர் மகேந்
திர புரத்துவகை நலியிணைப் பறைமுழங்கச், செந்தமிழ் முழக்கடை விடைக்கழி
யுடைக்குகன் சிறுபறை முழக்கியருளே - தெய்வமறை யாகிய பெரும்பறை
முழக்கிஞேன் சிறுபறை முழக்கியருளே. (௧)

693. மலைநா ணுடற்கொடுங் கூற்றமென வொருபான் மயக்கமிரு ளெ
ன்ன வொருபால் - வடமேரு வென்னவொரு பாலலை யெதிர்ந்தகரை மாய்க்கு
மூவ ரென்னவொருபா, லுலைநாண் மறக்கனலி யென்னவொரு பாலெங்கு முழ
லும்வளி யென்னவொருபா - லோங்கும் குறட்டுரு மென்னவொரு பாற்
கொலை யுவந்தகடி யென்னவொருபாற், கலைநாண் மதிச்சடைக் காபாலிகண்டக்
கருங்காள மென்னவொருபாற்-கலந்தெங்கு மாய்ப்போர் புரிந்துவெஞ் சூர்முழக்
கந்தபக் கையில்வாங்குஞ், சிலைநாண் முழக்கிய விடைக்கழி யுடைக்குகன் சிறு
பறை முழக்கியருளே - தெய்வமறை யாகிய பெரும்பறை முழக்கிஞேன் சிறு
பறை முழக்கியருளே. (௨)

694. பண்ணீர் மொழிக்கருங் கட்செய்ய வாய்மலைப் பாவைக்கொர்
பங்களித்த-பாலலோ சனரா யகன்கரத் தமருகப் பறையினொத் தும்படைக்கும்,
கண்ணீர் பிலிற்றுங் கடம்பணி தடம்புயக் காளைவே லைப்பழிக்கும் - காம
ருரு வத்தினம் பிள்ளைப் பிராட்டிருக் கைப்பறை யெனாத்துடைக்கும், புண
ணீர் மணத்தவடி வாட்படைச் சூரன் பொரும்படைப் பறைமுழக்கம் - போ
யொழிந் ததுவெனப் புத்தேளிர் பலரும் புகழ்ந்துரை முழக்கமோங்கத், தெண்
ணீர் முழக்குடை விடைக்கழி யுடைக்குகன் சிறுபறை முழக்கியருளே - தெய்வ
மறை யாகிய பெரும்பறை முழக்கிஞேன் சிறுபறை முழக்கியருளே. (௩)

695. வான்முழக் கஞ்செயும் புத்தேளி ராகிய மயூரங் களுக்கு நிறை
சூன் - மழைமுழக் காகவுந் தருவரா கியகொடிய வல்லிட வராக்களுக்கு, மான்
முழக் கஞ்செயும சனிமுழக் காகவு மதிக்குமுது குரவராய - வயங்குமக ணங்
கட்கி யாழ்முழக் காகவும் வையகம் வளர்த்துமேன்மேற், சேன்முழக கஞ்செயு
மலைப்புணரி யாகிய செழுங்காட்டி னுக்குவெய்ய - நீமுழக் காகவு மெழுந்தற
முழங்கச் செழுந்தளிர்ச் சோலைதோறுந், தேன்முழக் கஞ்செயும் விடைக்கழி
யுடைக்குகன் சிறுபறை முழக்கியருளே - தெய்வமறை யாகிய பெரும்பறை
முழக்கிஞேன் சிறுபறை முழக்கியருளே. (௪)

696. பொருவிடைக கொடியுடைப் புண்ணிய னலாதபிற புத்தேளி
ரும்பரந்து - புவியகத் தமருதற் றவருமற் றெவருமிப் போதுவம் மின்கள்
வந்தாற், கருவிடைப் புகுதறவி ரிப்பமுதல் யாவுங் கருத்தின் படிக்கெய்த
லாங் - காணுமென் றவர்வர விளிக்கும் பெரும்பறை கடுப்பப் பகுத்தநாலே,
யுருவிடைக் கொடியிமை கருங்குழலி னீமுன்ன முற்றது கடுப்பவானத்- தோம்

இளஞ் சோலையிற் பொறிவண்டு குற்றுமது வுண்டுவின் டிசைமுழக்குந், திரு விடைக் கழியெனு *மிடைக்கழி யுடைக்குகன் சிறுபறை முழக்கியருளே-தெய் வமறை யாகிய பெரும்பறை முழக்கினோன் சிறுபறை முழக்கியருளே. (௫)

வேறு.

697. எந்தை பிரானொரு கைக்கட் டமருக மிதுபறை குணின்மேய
தெவ்விட மென்று சடாடவி தேடி யிலங்கு மிளம்பிறையை
நிந்தை யிலாக்குணி லென்றுகை கொண்டு நெடும்புவ னம்பலவு
நெஞ்சு துணுக்கென வெற்றி முழக்க நிகழ்த்து நிகழ்ச்சியனே
சிந்தை விரும்பிய வெங்கண் மதங்களி தேக்கி யுவட்டெறியச்
சிறுகட கச்செங் கைக்கிசை யுங்குணில் சேரக் கொடுமோதி
முந்தை மறைப்பொரு ளாகிய செல்வன் முழக்குக சிறுபறையே
முகைமகிழ் முகமலர் குரவமர் குரவன் முழக்குக சிறுபறையே. (௬)

698. மின்னு வளம்பொலி மேக மிவர்ந்தொளிர் வித்தக மாதேவன்
விழைதர மழைதரு மகிழ்மயி லகல்வெரிந் திசையி னிவர்ந்தொளிர்வாய்
பன்னுப லண்ட மகண்டமு முண்டு படைக்க வமைந்தவிறற்
பன்மலர் மாலை புனைந்தொளிர் சத்தி பரித்த கரத்திறைவா
பின்னு திரைக்கடல் பொங்கி யெழுந்து பெயர்ந்தலை யக்கூவிப்
பேருஞ் சிறைவலி வாரண நின்று பிறங்குகொ டித்தருவே
முன்னுந ருள்ள முளைத்தெழு சோதி முழக்குக சிறுபறையே
முகைமகிழ் முகமலர் குரவமர் குரவன் முழக்குக சிறுபறையே. (௭)

699. பந்திய மைந்த பலாச்சுளை விண்ட பசுந்தேன் மதகளிறு
படுபுழை யொருகர மேற்கொடு நீந்தப் பரவிப் பெருகுவள
நந்திய வங்கண் விலங்க லடங்க நகும்பல குகைதோறு
ஞான முவப்ப மடங்கற் குருளையி னுரு மமர்ந்தருள்வா
யுந்தி யெழுந்தவன் முற்பல தேவ ரொருங்கு மிடைந்தொருநின் [ரான்
னொளிர்கைத் தொழிலிப் பறையினும் வன்ன முணர்ந்திட மொய்த்தன
முந்தி யெழுந்தொளிர் சந்தன கந்தன் முழக்குக சிறுபறையே
முகைமகிழ் முகமலர் குரவமர் குரவன் முழக்குக சிறுபறையே. (௮)

700. செக்கட் பணியுமிழ் செம்மணி யுங்கடி சேருங் காரகிலுஞ்
செறிகழை யுமிழ்குளிர் வெண்மணி யுங்கரு டேங்குங் கருமணியுந்
தொக்கட் டெழுவரி யேறெழு போதுந் துண்ணென லடையாத
தும்பிக் கொம்பு மயிற்பீ லியுமஞ் சவனத் தொடும்வாரி
சக்கட் கருமுகில் காக்குங் கானத் தரைமுத லெந்நிலனுந்
தழைய வெடுத்தெதிர் வீசு தரங்கத் தண்கா விரிநாடா
முக்கட் கனிதரு மாமறை வித்து முழக்குக சிறுபறையே
முகைமகிழ் முகமலர் குரவமர் குரவன் முழக்குக சிறுபறையே. (௯)

701. கற்று விளங்கு நலத்தினர் யாருங் கரையக் கரைகாணுக்
கரையில் வளம்படு கரையிரு பாலுங் கமலக் கையேற்ப
வுற்று விளங்கிய பலவகை மணியு மொருங்கொளிர் செம்பொன்னு
மோங்கியெழுந்து விழுந்து புரண்டுக ளுண்டவர் போனிகழும்
பற்று முடங்கு திரைக்கை யெடுத்துப் பார்முழு துங்கண்டு
பங்கே ருகநிதி யென்று வியப்பப் பலவெறி யுந்தகைசான்
முற்று முழங்குங் காவிரி நாடன் முழக்குக சிறுபறையே
முகைமகிழ் முகமலர் குரவமர் குரவன் முழக்குக சிறுபறையே. (௰)

௯.—சிறுபறைப்பருவம் முற்றிற்று.

* இடைக்கழியென்றும் இத்தலத்திற்கு ஒருபெயருண்டு.

707. பொன்செய்த மெல்லிதழ்த் தாமரை யரக்காம்பல் பூத்துநனி பொலிவாவியிற் - பொம்மற் செருத்தற் கொடும்பிணர்க் கோட்டெருமை பொள்ளெனப்பாயவெருவி, மின்செய்தசெங்கட் டகட்டகட் டிளவாளை மீமிசையெழுந்து பாய்ந்து-மேவும்பெருங்குலைக் கட்பொலி யிலாங்கலி வியன்குலையை மோதவஃது, கொன்செய்த காய்பல வுதிர்க்கவவை யத்தடக் கொளவிழ வதற்கஞ்சியக்-கோட்டெருமை யோடவது கண்டவ்வய வாளையக் குளிர்தடம் புக்குமகிழூர், தென் செய்த மென்பால் விடைக்கழி யுடைக்குழக சிறுதே ருருட்டியருளே-திருமால் வயிற்றடை பெருந்தே ருருட்டிசேய் சிறுதே ருருட்டியருளே. (௬)

708. கரையெறியும் வெள்ளப் பெருக்கிற் றருக்குடைக் காவிரி யொழுக்கின்வந்த - காமரு கமஞ்சூற் பெருஞ்சங்க மொருபெரும் கான்மதகு காலவெளி யோர், விரையெறியு மொண்மலர்க் கொடியிற் கழைக்கூத்தர் விழையத் தவழ்ந்தேறியோர் - விரிதலைக் கமுகிருந் தொண்முத் துகுப்பவவை வீழ்தலைக் கண்டநீல,வரையெறியு மைந்துடைத் தோளுழ வரிற்சிலர் வளக்கமு கரும்புகுக்கும் - வறிதெனச் சிலர்வான மீனுகுவ தென்னவென மாழு வளங்கள்பெருகித், திரையெறியு மென்பால் விடைக்கழி யுடைக்குழக சிறுதே ருருட்டியருளே-திருமால் வயிற்றடை பெருந்தே ருருட்டிசேய் சிறுதே ருருட்டியருளே. (௭)

709. எழுந்தோகை குடிகொள வறந்தலை யெடுத்தெங்கு மேறமறையாயதுாய - விலைதையந் தணர்நா வெனுங்கொம்பு பற்றிமே லேறவேள் விச்சாலையி, னழுந்தோகை நீர்ந்துகிளர் வேதியுங் குண்டமு மலங்குமே கலையுநோக்கி-யரணியு தரத்தெழுந் தழலேற வழலேற வாவுமவி யெங்குமேறத், தழுந்தோகை மார்கருங் குழலினறு மாலையுந் தடமுலையி னுழுகு புழுகுஞ் - சாந்துமே றத்தேவ ரமரா வதிக்கட் டமைந்துகுடி யேறநாளுஞ்,செழுந்தோகை மயிலே றிடைக்கழியுடைக்குழக சிறுதே ருருட்டியருளே - திருமால் வயிற்றடை பெருந்தே ருருட்டிசேய் சிறுதே ருருட்டி யருளே. (௮)

710. சுடர்செயும் பன்மணித் தொடைமாதர் மைந்தரொடு தொக்குவிளையாடநீடு - சோலையி னளிக்குல முழக்கியுண் டுமிழவீழ் சுந்தைநறுந் தேறல்வெயிலான், விடர்செயும் புவியுட் புகுந்துபா தலமுழுதும் வெள்ளமே யெனநிரப்பி-மீதுபெரு கிப்பசுங் கன்னலுங் கதலியும் வேரொடு பறித்தெழுந்து, படர்செயும் போதெதிர்ப் பட்டவான் முட்டவெழு பசியநெற் போரனைத்தும் - பார்பொறையுயிர்த்திட வெடுத்துக் கடுத்தகழ்ப் பௌவத் தெறிந்த தனைவான், றிடர்செயும் பெருவள விடைக்கழி யுடைக்குழக சிறுதே ருருட்டியருளே - திருமால் வயிற்றடை பெருந்தே ருருட்டிசேய் சிறுதே ருருட்டியருளே. (௯)

711. தாமவி கொடுந்தொழிற் கருமலைக் குந்திவலை தருமலைக் குங்காலவா-தருமகட் குங்குறவர் திருமகட் குங்கொழுந சாரதுங்கு வேரன்முத்தங், காமலி பொருப்புதவு மங்கைக்கு மெறிதிரைக் கங்கைக்கு மொருபுதல்வமா-கடவுளார் மூவர்க்கும் யாவர்க்கு நாயக கருத்தைத் திருத்துமினிய, மாமலி பெரும்புகழ்த் தென்கலைக் குந்தெய்வ வடகலைக் குந்தலைவநுன் - மதிக்குந் துதிக்கும் திதிக்குங் கதிக்குமுண் மதிக்குநா யகமுகிலளாந், தேமலி செழும்பொழில் விடைக்கழி யுடைக்குழக சிறுதே ருருட்டியருளே - திருமால் வயிற்றடை பெருந்தே ருருட்டிசேய் சிறுதே ருருட்டி யருளே. (௧௦)

௧௦.—சிறுதேர்ப்பருவம் முற்றிற்று.

---

திருவிடைக்கழிமுருகர் பிள்ளைத்தமிழ் முற்றுப்பெற்றது.

## சிறப்புப்பாயிரம்.

[இது பழையபதிப்பைச் சார்ந்தது. கி. பி. 1883.]

712. வண்மைதரு மழவினரு மறவோரும் பெருந்செல்வம் வாய்ந்து
ளாரு, முண்மையுமோ வாப்பிணியு முறுபசியுஞ் செறுபகையு முறுதலில்லா,
வொண்மையும்பன் னாட்டுறுபா ரம்முதிரு மிறைகுறையா துதவித் தாங்கும்,
திண்மையுங்கொண் டரணுடைத்தாய் நாட்டியற்கோர் காட்டாய சென்னி
நாட்டில். (க)

713. துலங்குவயற் செஞ்சாலி வெண்சாலி யீன்றகதிர் துறுமி மீப்போ,
யலங்கிரவி மதியுடல முறைதீண்டிக் கிரணத்தா னாற்றி யன்றோ, நிலங்குறு
செங் கதிரோன்வெண் கதிரோனென் றிசைத்திடுவே ரெய்தச்செய்யு, நலங்கு
லவிப் பெருகுதிரு விடைக்கழியென் றொருநாம நவின்மூதூரில். (உ)

714. தண்ணியபுண் ணியநீற்றுச் சார்பொருவா மெய்யடியார் தமக்
கெஞ் ஞான்று,மண்ணியபே ரின்பநல மருள்செய்வா னனிவிரும்பி யவனியேத்
தப், பண்ணியன்மென் மொழியிருவர் பாலமரக் குரவடிவாழ் பரமன் செய்ய,
மண்ணியமா மணியனைய முருகேசன் மறைச்சிலம்பார் மலர்ப்பூந் தாளில். (ந)

715. வில்லாரு மணிமாட மிலங்குசிராப் பள்ளிநகர் விளங்க வந்தோன்,
பல்லாருங் கொண்டாடப் பலகலையுங் கற்றுணர்ந்த பண்பின் மிக்கோ, னெல்
லாரு மீனாட்சி சுந்தரனா வலர்பெருமா னினிய வன்பாற், சொல்லாரு மியற்பிள்
ளைக் கவிமாலை தொடுத்தினிது சூட்டினானல். (ச)

716. அனையமாக் கவித்தொடையைக் கரலிகிதத் தமைவுறுக்க ளனைத்
துமோட்டிப், புனையுமா மணிச்சுடிகைப் பணித்தலையிற் கிடந்தபெரும் புடவி
மீது, நினையுமா பரந்தெங்குஞ் சிறந்தோங்கி நனிவிளங்கி நிகழு மாறு, வனை
யுமா வியலச்சின் மயலகலப் பதிப்பித்து வழங்கு கென்று. (ரு)

717. அல்லூரு மணிகண்டச் சிவலோகத் தியாகேச ரழகி னார்ந்த,
செல்லூருங் கரிபகுழற் றிருவெண்ணீற் றுமையோடு சிறப்பாரூநம், வில்லூருந்
திருக்கோயில் கொண்டமர்ந்தின் பினிதருளு மேன்மை நோக்கிப், பல்லூரு
நல்லூரென் பெருமணநல் லூர்செய்தவப் பயனுய்வந்தோன். (சு)

718. நற்றமிழ்முற் றுறவோதிக் கற்றநா வலர்செய்ய நாவைமேவும்,
பொற்றவிசாப் பெற்றதன்க ணரசிருந்தன் னோரினிது புனைந்து நானுஞ், சொற்
றதமிழ்க் கவிமதகுஞ் சரத்தேறி யெற்றுதிசை சுற்றி முற்றி, யுற்றபெரும்
புவியளவோ திசைகடந்தப் புறத்தும்போ யுலாவு சீரான். (எ)

719. நீங்குறத்துன் பிவலர்க ளினிதுதரும் வள்ளன்மை நிரம்பக் கல்
லா, தோங்குவள்ளற் பெயர்பூண்டு முன்னிருந்தா ரிக்காலைத் துறினன்னே
ரைத், தீங்குசெறி யாதவொரு சாலமா றுக்கரெனச் சேர்த்துக் கொண்டு,
தாங்குபெரு வள்ளன்மை பயிற்றலா மெனநினையுஞ் சலசக் கையான். (அ)

720. தண்ணிலவு புனைசடிலத் திறையவன்றன் மலர்க்கன்பு சார்ந்த
தூயன், கண்ணிலவு மருமலர்கொண் டவன்றனையே யருச்சிக்கக் கருது நேய,
னுண்ணிலவு மவனடியார் தம்மையெலா மவனெனவே யுளங்கொள் சீலன்,
பண்ணிலவு மினியமொழிச் சபாபதிமா மகிபாலன் பரக் கேட்டு. (கூ)

721. இதுநமது முன்செய்பெரும் புண்ணியத்தின் பயனெனவே
யெண்ணியுள்ளக், குதுகலத்தோ டாய்ந்தெழிலார் தருமச்சிற் பதிப்பித்துக்
கொடுத்திட்டானன், முதுபுகழ்ப்போர் வையன்கலைகண் முழுதுணர்ந்த மூதறி
ஞன் முனிவிலன்பன், விதுமுடியோ னடிமரவுந் தியாகரா சப்பெயர்கொண்
மேன்மையோனே. (க0)

உ

சிவமயம்.

# ஸ்ரீ சேக்கிழார் பிள்ளைத்தமிழ்.

## பாயிரம்.

### விநாயகக்கடவுள் வணக்கம்.

722. மாமேவு வான்பிறை முடிப்பிறை யிரண்டென்ன வாய்க்கடைத் தோற்றியவிரு - மருப்பிரண் டென்னவங் கைக்கோ டிரண்டென்ன மார்பின் முத் தாரமென்னப்,பாமேவு பேருதர பந்தமென வரைசூழ் படாமெனத்தாளின் முத்தம்-பதித்தகழ லெனவிரவ மேலோங்கு பேருருப் பண்ணவனை யஞ்சலிப் பா, மேமேவு ஞானசபை யிறைவர்தம் மேனியி னிணங்குற வெழூஉப்புலகெலா - மென்னுமறை யாதியாக் கொண்டவ ருயிர்க்கருளு மியல்பனைத் துந்தெரித்து, நாமேவு மம்முதலொ டொன்றவினை யுருபுதொக நான்கனடி யாதிசெய்து - நாற்சீரி னுநெறி விளக்கியொளிர் சேக்கிழார் நற்றமிழ்க் கவிதழையவே. (க)

### குருவணக்கமும், அவையடக்கமும்.

723. ஓங்குகயி லாயபரம் பரைநந்தி யடிகட் குறுமரபெட் டாவது*பிற் றோன் றலா யெங்க - ளுயர்திருவா வடுதுறைச்சுப் பிரமணிய குரவற் குற் றபத்தொன் பதாவது†முற் றோன்றலாய்ப் பொலிந்து,
தேங்குசிவப் பிரகாச முதலியவாய் மலர்ந்து திகழுமா பதிசிவனே குன் றையுற மேவித்- திருந்துமோர் வளங்கொண்டு பெருமையின்மேலாகிச் சிறந்தலாற் செம்மேனிக் குமரவே ளொத்தும்,
பாங்குபெறத் துதிக்கையொடோர் கோட்டத்த னுய பயிற்சியினக் குமரவே டருத்தலைய னொத்தும்-பரவுசேக் கிழானெனும்பேர் பரித்தலினக் கணேசப் பண்ணவனை யினிதுயிர்த்த திருத்தாதை யொத்தும்,
வீங்குபுகழ் படைத்தவருண் மொழித்தேவன் புராணம் விரித்துரைத்தா னவனடிதாழ்ந் தென்னறிவிற் கேற்ப - மேயபிள்ளைத் தமிழெனவொன் றுரைப்பலஃ தறிவான் மிக்கவர்தங் குழாத்தினுக்கு மிக்க நகை தருமே. (உ)

---

* பிற்றோன்றல்: திருநந்திதேவர், சனற்குமாரதேவர், சத்தியஞானதரிசனிகள், பரஞ்சோதிமஹாமுனிவர், மெய்கண்டசிவாசாரியர், அருணந்திசிவாசாரியர், மறைஞானசிவாசாரியர், உமாபதிசிவாசாரியர்.

† முற்றோன்றல்: அருணமச்சிவாயர், சித்தர் சிவப்பிரகாசர், நமச்சிவாய மூர்த்திகள், மறைஞானதேசிகர், அம்பலவாணதேசிகர், உருத்திரகோடிதேசிகர், வேலப்பதேசிகர், முற்குமாரசாமிதேசிகர், பிற்குமாரசாமிதேசிகர், மாசிலாமணிதேசிகர், இராமலிங்கதேசிகர், முன்வேலப்பதேசிகர், பின்வேலப்ப தேசிகர், திருச்சிற்றம்பலதேசிகர், அம்பலவாணதேசிகர், சுப்பிரமணியதேசிகர், அம்பலவாணதேசிகர், சுப்பிரமணியதேசிகர்.

# க.—காப்புப்பருவம்.

*"தில்லைவாழந்தணர்"

**724.** கார்கொண்ட சோலைசூழ் தில்லையா ரோரரைக் காணம்பி யாரூரர்முக்-காலரைக் காலாக முடிவுசெய் தருண்மாக் கவித்திசையின் வீற்றிருக்கு, மேர்கொண்ட தில்லைமூ வாயிரர்முன் னெழுவருமெழுவருந் தழுவருமெம - திதயந் தழால்கொண் டுறைந்திடச் செய்தவரை யெப்போது மேத்தெடுப்பாம், பார்கொண்ட தொண்டர்வர லாறுசொல் புராணமம் பலவரரு ளாலமைத்த - படி தெரித் திடவுல கெலாமெனுஞ் சுருதிமாப் பண்ணூர் நிற்றும் பொருத்திப், பேர்கொண்ட சைவபரி பாடையறி வரியசம் பிரதாய முதலியாவும் - பிறங்கத் தெரித் தெம்மை யாண்டருள் நத்தூர்ப் பிரானைப் புரக்கவென்றே. (க)

"இலைமலிந்தவேணம்பி"

**725.** இலைமலி யெனுங்கவியு ளெழுபுவன முய்பரசு மெழுமுனிவ ரேத்தவமர்வா - ரெழுபுரவி வையமிசை யெழுகதிரும் வட்குமணி யெழுவுருவு முட்கு மொளிசான், மலைமலி புயத்தமெறி பத்தர்முத லெழுபவமு மாய்த்தவிற லெழுவோரையும் - வாயார வாழ்த்தித் துதித்தவ ரடிக்கமல மலர்முடிக் கணியாக்கு வாங், கலைமலி பெரும்புலவர் கைகுவிக் கக்கலைக் கன்னிநின் றேவல்கேட்கக் - கனகசபை யார்முத லளித்தருள வளவாம கத்துவ மடைந்திருந்து, மலைமலி சுணக்கமுப் பேனென் றுரைத்தருளி யாம்பெருக் கத்துவேண்டு - மான்ற பணி வெனுமொழிப் பொருடேற்று குன்றைநக ராளியைக் காக்கவென்றே. (உ)

"மும்மையாலுலகாண்ட"

**726.** மும்மைமறை யும்பரவு மும்மையுல கும்புகழு மும்மையாப் பகர மாதி - மும்மையுயிர் குறினெடி நணித்துமத சவ்வூர்ந்து முதலமையு நாமமுற் றூர், செம்மைபெறு மும்மையாம் வருணத் துதித்துச் சிறந்தோங்கு மூர்த்தி யார்முத் - செறியுமிரு மும்மையார் செம்பொற் பதாம்புயஞ் சென்னிவைத் தேத்தெடுப்பா, நம்மையருள் சிவபாத விருதய ருளத்துவகை நண்ணவொண் பொருளாதலா - ஞடுமுழ வாரவல மியைதலா லியாவோரு நாவலர் பிரானென்னலால், வெம்மைதவிர் புகலியார் முதன்மூவ ரும்புகலும் வேதத் தமிழ்க்கணுள்ள - மெய்ம்மையை விரித்துத் தெரித்தருள்செய் குன்றையூர் வேந்தைப் புரக்கவென்றே. (ங)

"திருநின்றசெம்மையே"

**727.** திருநின்ற செய்யுள்புக லீற்றறையு ளருகந்தர் சிந்தைவெந் திடவமர்ந்துஞ் - செறிதுயர்க் கடன்மறக் கல்லொடவ ராழ்வொர் திரைக்கடற் கன்மி

---

* காப்புப்பருவத்திலுள்ள பதினொருபாடல்களில் ஏனைப்பிள்ளைத்தமிழ்களிற் கூறுவதுபோலத் திருமால்முதலியவர்களைக் காப்பாகக்கூறாமல் இந்நூலிற் சேவையர்காவலர்க்குத் திருத்தொண்டர்களைக் காப்பாகக்கூறத்தொடங்கிய இந்நூலாசிரியர் இப்பருவத்தில் அவர்களைத் திருத்தொண்டத்தொகைச் செய்யுள்முறைப்படி பாராட்டிக் கூறுகின்றனரெனக்கொள்க.

தந்துங், கருநின்ற கண்டரருள் வெளிசெய்சா வரசர்முற் கருதுபுக ழெழுவோ ரையுங் - கருத்திடை யருத்தியி னிருத்திமற் றவர்பதங் காதலித் துத்திப்பாங், தருநின்ற செங்கைத் தலங்குவித் திடுமுனர் தையலொரு பாகர் தொண்டர் - சரித்திர மனைத்துமொரு வாறுற நிரம்பத் தவாமன வகைக்குவிக்க, வருநின்ற சீர்கொள்புலி யூர்க்கோட்ட மேயதற் கொப்பவுல கேத்தநாளு, மோங்குபுலி யூர்க் கோட்ட மேயருள் றத்தா ரொருத்தரைக் காக்கவென்றே. (ச)

"வம்பறுவரிவண்டு"

728. வம்பறு யாப்புலவில் வம்பறு முலையொரு மடக்கொடியை வேட்ட லின்றி - வண்பிரம சரியநிலை வைகுநா ளேயொரு மடப்பாவை யைப்பிறப்பித், தும்பறு வுந்திற லரிக்குருளை போலெழுந் துவகையார்க் கும்பிறப்பித் - துலா யவர்மு னைவரைவெ லறுவர்தொற் பாதமல ருச்சிவைத் தேத்தெடுப்பா, மம்பறு வாழிமுழு துண்டதிரு முனிவிரித் தருளிய தமிழ்க்காக்கமா-வருண்மூவ ரருண் மறைப் பொருடெரிய முன்னொருவ ரருண்மறைப் பொருள்விளக்கு, நம்பறு வித்தியா ரணியமுனி வரனுள யப்பயாப் புறவிரித்த-நாவலர் பிரானைத் திருக் குன்றை யருண்மொழி நலத்தனைக் காக்கவென்றே. (ரு)

"வார்கொண்டவனமுலையாள்"

729. வார்கொண்ட வனமுலை யெனுங்கவியு ஞயர்சைவ மாண்பினர்க டலைவணக்கி-வாயார வாழ்த்தித் தியானித் திடச்சங்க மங்கைவரு சாக்கியர்முத, லோர்கொண்ட புகழ்கொடைவை வேலடையு மடையுற்று மெய்தாது மாகிநின்ற - வினியநக ரடையுமேற் றெளிர்கின்ற வறுவரையு மிறுவரையு மேத்தெடுப்பாங், கார்கொண்ட வமணரிற் றாமணியை வளவர்கோன் கங்குல்பக லாராய்தரக் - கண்டொழித் தாவதிது வேயென்று தொண்டர்தம கத்துவங் கருதவுய்த்துப், பார்கொண்ட மன்னரல் லவைநீக்கி நல்லவை பரித்திடச் செயலமைச்சர் - பண் பென றெரித்தருள் றத்து ருதித்தவெம் பரமனைக் காக்கவென்றே. (சு)

"பொய்யடிமையில்லாத"

730. பொய்யடிமை யில்லாத செய்யுளி னிலக்கியம் புகலிலக் கணமெய் ஞ்ஞான - போதரா லாதியா யாவுமரி தபவுணர்பு புரகரனை யேதுதித்து, மெய் யடிமை வாய்ந்தசங் கப்புலவர் முதலாய வித்தக வொழுக்கமிக்கார் -விண்மருவு வார்பரவு மெண்மருமெ மிருதயம் விடாதமர வேத்தெடுப்பாஞ், செய்யமலா ராதன மிருந்துபல சாதியுஞ் சேரப் படைத்ததேவுஞ் - செப்பரிய வாயவவ் வச் சாதி குறிகுணஞ் செய்கைகுடி கொளுமியல்பு, வெய்யமொழி யுணவுமுன் விரித்தெலா மறியவலர் மெய்யறிஞ ரெனவிளக்கி - மேம்பட்ட வேளாண் குலக்கதி ரெனுங்குன்றை விமலனைக் காக்கவென்றே. (எ)

"கறைக்கண்டன்கழலடியே"

731. கறைக்கண்டன் யாப்பினைத் ததிகாரி மேலோரதி காரிமலை மங்கை யொருபாற் - கலந்திருக் கவுநிருவி காரிநிர கங்காரி காரியா காரிநாளு, மறைக் கண் டருஞ்சோதி யோங்காரி யருளேய வாங்காரி முதலமர்ந்த - வண்கணம் புல்லர்முற் சைவரா மைவரு மகிழ்ச்சியுற வேத்தெடுப்பாம், பிறைக்கண்ட மிது

பகலின் முகிழுமைவ தறிசயப் பெற்றியென் றுமொளர்கள் - டெட்டப் பெருக்கெடுத் துவருபா லாற்றலே பிறக்குவிள வீசலிறுத், தறைக்கண்ட கிமிர்கந்தியஞ்சோலே தவழ்தருந் தொண்டையோ லட்டு யாட்டும் - தொல்புகழ்க் குன்றை வருபாலரு வாயர்முத் ரேன்றலேக் காக்கவென்றே. (அ)

" கடல்சூழ்ந்தவுலகெலாம் "

732. கடல்சூழ்ந்த யாப்பமை நறுஞ்சூழ்ந்த வெற்ற்க் கழற்கிங்க மன்னன் மன்னிக் - கழியா மட்டங்கழி மீடக்கழி யருட்கே கழுமலமா பெருத் துணையாயில், விடல்சூழ்ந்த சிந்தையொ ரிகழ்ந்துணை பெருந்தம் விளக்கும் புகழ்த்துணைவய-வேட்புலி யெனுந்திருக் கோட்புலியில் வைவரையு மேன்மேலு மேத்தெடுப்பா, மடல்சூழ்ந்த தொண்டர்வர லாற்றுவிரி புலமெலா மறியத் தெருட்டுகுரவிற்-கமையப் புனைந்துகொல் சாதியடை யாளங்கொ ளமையுமெது சொலினு மென்ன, மடல்சூழ்ந்த செங்குவளை மாலையணி திண்டோள் வலத்தனை நிலத்தனைவரும்-வாயாரவாழ்த்துகுன் றத்தூ ருதித்தபெரு வள்ளலைக் காக்கவென்றே.

" பத்தராய்ப்பணிவார்கள் "

733. பத்தரா யென்றெடுத் தருட்டிருக் கயிலைபெரு மைபங்கோதை யாரை வேட்ட - பான்மைக் கிணங்கவோ ரிருபுதல்வி யார்தமைப் பயவாமலேயயர்ந்த, சுத்தராய் வன்றொண்ட ரின்றொண்டர் தழுவித் துதிக்கவைத் தவர்களாய-தொகையுளா ரென்னுமெழு வகையுளார் பொற்பதத் தொழுதேத் தெடுத்தல் செய்வா, சித்தராய் மன்றுண்ட வில்லா ருவக்கும்வெண் ணீற்றொளி நிலா வொளியென - நினைந்தனைந் தாங்குக்கு வளைபொலிய விண்டே னிரம்பவுண வளியடைந்தாங், கத்தராய் கண்மணித் தொடைபொலி தரப்பொலியு மம்புயத் தவனைநம்பு - மளவா வளந்துன்று குன்றைநகர் மேயவரு ளாளியைக் காக்க வென்றே. (க0)

" மன்னியசீர்மறைநாவன் "

734. மன்னிய திருப்பாட்டி லாகார முதலிய மறந்திராப் பகன்முயன்று-வையத்து வாழ்வார்க ளேக்காத வண்ணநவ மணியா லயம்புரிந்து, மின்னிய சடைப்பரமர் பிறதளி மறுத்தடை விதங்கண் டுவந்துபூசல் - வித்தகர்முன் மேயவெழு வோருமெம் மிதயத்து மேவவைத் தேத்தெடுப்பாம், பன்னியதொகையும்வகையு முதலாத லான்முதற் பகர்சைவ ரேயருளினுர் - பரவுவிரி யிறுதியா தலினிறுதி யாரெனப் படுசைவ ரேயருளினுர், துன்னிய பொருத்தமிது வென்றுலக மகிழ்தரத் தொண்டர்வர லாறனைத்துந் - நாவாய்மலர்ந்தவருண் மொழிவான வனையான்ற தோன்றலைக் காக்கவென்றே. (கக)

க.—காப்புப்பருவம் முற்றிற்று.

## உ.—செங்கீரைப்பருவம்.



735. ஒண்கொண்ட பொதுவகத் துலகெலா முய்யரா றுலகெலா மென்ற திஞ்சொ-லுவந்தே டெழுத்தாணி கொண்டெழு திரண்டுகை யும்புவி யுறப் பதித்து, வண்கொண்ட வொருதாண் மடித்தூன்றி யொருதாள் வயங்குற வெடுத் தூன்றியொண் - வாய்கவிச் சுவை யொழுக் கழிவிப்ப தெளவமுத மாட்சிமை யொழுக்கடுப்ப, வெண்கொண்ட மேற்றுநீ றிளநிலவு மொண்காதிருக்

குழை யிளங்கதிரும்விட் - டெறிப்பவிள முறுவலுந் தோன்றமலர் திருமுக மெடுத்துவா னளவுநோக்கித், திங்கொண்ட குன்றையம் பதியருண் மொழித் தேவ செங்கீரை யாடியருளே - திருத்தொண்டை நன்னாட்டு வேளாளர் குல திலக செங்கீரை யாடியருளே. (க)

736. பொருவரிய தொண்டர்கள் புராணத்து னிறையருட் பொலிவா னிரம்பு சொற்கள் - போற்றிடு விருப்பநீர் நம்மைமழ வாக்கிவாய் புகல்குதலை மழலையென்ன, மருவுமொழி யாசையுந் தீர்பய னுறுதென்ன வள்ளான் மறுத் துரைத்தால் - வார்த்தைப் பயன்கொள வலேத்தக்க சான்றுநீ வாய்மலர் புரா ணநின்று, மொருவரிய தாஞ்செப்ப வுற்றபொரு ளொன்றகவி யோதவேண்டுவ தினியெவ-னுனதுசொற் பயனுணர்த லிலமென்னின் மழவா வுவப்பதும் பொய் ம்மையாமே, திருவமிகு குன்றையம் பதியருண் மொழித்தேவ செங்கீரை யாடி யருளே - திருத்தொண்டை நன்னாட்டு வேளாளர் குலதிலக செங்கீரை யாடி யருளே. (உ)

737. ஒப்பரிய தொண்டர்தம் மருமையும் பெருமையு முவக்குமவ ரவர் செய்கையு - முவமையில் லாச்செய்கை நுட்பமுந் திட்பமும் மும்பர்கோ னரு ட்டபமுந், தப்பரிய செந்தமிழ்த் தொடைநடையு மடையுந் தவாப்பொரு ளணிச் சிறப்புந் - தமிழ்மறை யடங்குபல மந்தணமும் வெள்ளிடைத் தவிரும்வெற் பெனவிளங்க, வெப்பரிய முழுமதிக் குடைநிழற் றனபாயன் மேயவவை யக நயந்து - வியந்துமெய்ப் பாட்டிஞெடு பாராட்டி மகிழமேன் மேல்விரித் தரு ளியபிரான், செப்பரிய குன்றையம் பதியருண் மொழித்தேவ செங்கீரை யாடி யருளே - திருத்தொண்டை நன்னாட்டு வேளாளர் குலதிலக செங்கீரை யாடி யருளே. (ங)

738. தாயவொளி யிருடபுபொன் மாளிகைத் தில்லைச் சபாநடன நாதர்பெத்தான்
சாம்பானை யுய்த்தனம் திருவாண தீக்ஷையாற் றகுமுத்தி யடைவியெ
யாயதிரு முகமுய்த் திடப்பெற்ற கைலாய வம்பரம் பரையிலளவா [ன்றே
வருளுருவ மாயவ தரித்திட்ட மெய்ஞ்ஞான வற்புத வுமாபதிசிவ
னேயமிக விம்மைக்கு மறுமைக்கு மாதார நிலயநீ தென்றுணர்ந்து[தாய்
நினதுவர லாறருமை பாராட்டி யருள்செய நிரம்புமான் மியமடைந்
தேயநிகழ் குன்றையம் பதியருண் மொழித்தேவ செங்கீரை யாடியருளே
திருத்தொண்டை நன்னாட்டுவேளாளர் குலதிலகசெங்கீரையாடியருளே.

739. பொருந்துமா யிரமுகக் கங்கைமர பிற்கதிர்கள் பொலியுமா யிர முள்ளவன் - போற்றேன்றி யாயிர மறைக்குமெட் டாச்சென்னி பொற்பவா யிரமுடையகோன், மருந்துமே ரருள்பெற்ற மைக்கேற்ப வாயிரம் வயங்கு பொற்காணிநீ இய-மண்டப மிவர்ந்தா யிரந்தொண்டர் வரலாறு வாய்மலர்ந் தவ வாவிவா, யிருந்துசூழ் கொழுவுண்டு புண்டரீ கத்தின்வா யிமைபுல வறத்துவட் டி - யிருஞ்சங்க னம்பே டனத்தழுவி நாணமுந் தியல்பேடு மற்றென்றுனுஞ், செருந்துசூழ் குன்றையம் பதியருண் மொழித்தேவ செங்கீரை யாடியருளே - திருத்தொண்டை நன்னாட்டு வேளாளர் குலதிலக செங்கீரை யாடியருளே. (ரு)

வேறு.

740. தோம்பல வுடையேம் பிறவியை யகற்றுங் கடவுளின் சிகாமுத்
தாகே மெழுகே மிரவும் பகலுந் துதியே மாயினு
நாம்பல தேவரை நன்னே மென்னே நயலோர் மியதேவமா
ருண்மலர் பலகொடு நின்னடி யேற்றி யேத்துவ மேற்கொண்டு
கூம்பல்செய் கையே மெய்யே மிதனிற் கோமா வீயமுறுங்
கூலி யெவன்கொ லவாயமு ங்கிக் குலாவு மனைப்புறிவே
மாம்ப லவாவுதன் மேய புயாசல வாடுக செங்கீரை
யாரரு ளாகர சேவையர் காவல வாடுக செங்கீரை. (௬)

741. புண்ணிய முதலே பொங்கொளி யொளியே பொய்யாப் பெருவாழ்வே
பொள்ளலின் முத்தே கள்ளமில் வித்தே புரையில் சுவைப்பாகே
தண்ணிய வமுதே மண்ணியன் மதியே தமிழ்கா வலவேதே
சத்துவ நிதியே பொத்திய மலநோய் சாடு பெரும்பகையே
யெண்ணிய வன்ப ருளத்தமு தூறு மினிக்கு நறுந்தேனே
யென்றும் பத்தி ரசங்கனி கனியே யென்னா விறைமங்கட்
கண்ணிய பொருளே யாய்பவர் தெருளே யாடுக செங்கீரை
யாரரு ளாகர சேவையர் காவல வாடுக செங்கீரை. (௭)

742. சூழிய மேவிய கொண்டை விளங்கத் தொட்டுக் கட்டியபொற்
சுட்டி யிலங்கப் புண்டர நீறு துதைந்து நிலாக்கால
வாழிய கனிவா யூறற் றேறன் மார்பின் வழிந்தோட
வடிகா திற்புனை குழையிற் செவ்விய மணியினொளிக்கவிச
வீழிய வாவிய வாயிள முறுவல் விளங்க வரைப்பொன்றன்
மின்னுக் காலப் பேரெழி னேக்குநர் விழிகள் விருந்துசெய
வாழிய வன்ப ரகத்தமர் செஞ்சுட ராடுக செங்கீரை
யாரரு ளாகர சேவையர் காவல வாடுக செங்கீரை. (௮)

743. இவர்சரி யையரிவர் கிரியையர் யோகத் தினரிவ ரிவர்ஞான
வியல்பின ரிவரி லறத்து வழாதவ ரிவர்துற வறவின்றூர்
கவர்மன மொழியிவர் பிரமச ரியநிலை கைக்கொண் டோரிவரே
கண்குளிர் வேடம் பொருளென நம்பினர் கருதுறு மிவராதித்
தவர்நிலை யுணரா வருளின னிறைவன் றக்கவ ருலகறியச்
சாற்றின னலனவ னேயுல கறியச் சாற்றிய படியென்ன
வவரவர் செயன்முத லருளிய வல்லவ வாடுக செங்கீரை
யாரரு ளாகர சேவையர் காவல வாடுக செங்கீரை. (௯)

744. நந்தி வரைத்தலை யொருமுனி சாபி யயக்கப் பொழிநிம்பா
னதியா யங்கங் கோடுபு கூட மயங்கின ரேரிகுள
முந்தி யெழுங்கா லோடை தடாக முதற்பல வுந்நிறையா
முழுத்த சுவைப்பா லாக்குபு பின்னும் மூரிக் கடல்புக்குப்

புத்தி யவாவ சிரம்பலின் மாயோன் புரிகண் டுயிலுமிடம்
புகலிது வோவது வோவென வாயப் பொலிதண் டகாட
வத்தி மதிச்சடை யண்ணற் கினிபவ வாடுக செங்கீரை
யாசரு ளாகர சேவையர் காவல வாடுக செங்கீரை. (க௦)

௨.—செங்கீரைப்பருவம் முற்றிற்று.

## ௩.—தாலப்பருவம்.

745. வெண்ணந் துரதி வயிறுளைந்து வீற்று வீற்றுக் கருவுயிர்த்த
வெண்ணித் திலத்தை யரித்தெடுத்து வெள்வாய்க் களமர் கரைகுவிக்க
வண்ணந் துவரென் றுவமிக்கும் வாயோ திமநீர் குடைந்தெழுந்து
மற்றக் குவியன் மேலிவர்ந்து மருவி முதிரா வெயில்காயக்
கண்ணந் துறவுன் டெழுதருமக் களமர் மரால முட்டையினைக்
கதிர்நித் திலமென் றுநக்குவித்தோங் கடையே மயங்கி யெனநாணுந்
தண்ணந் துறைசேர் குன்றத்தூர்த் தலைவா தாலோ தாலேலோ
சகலா கமபண் டிததெய்வச் சைவா தாலோ தாலேலோ. (க)

746. நண்பா லெவரு முறத்தரிக்கு நலஞ்சூர்நீற்றின் வெள்ளொளியா
லுவா லெவரு மரமுழக்க நாளுஞ் செயவாம் பேரொலியா
லெண்பாற் புலவ ரமுதுகொளற் கெந்த விடத்து நெருங்குதலா
லோர்சா லரம்பை யெழுதலினு லியனு கேசன் வைகுதலாற்
கண்பாற் கரிதோய் திருமடத்தைக் காமுற் றிடலான் மாளிகைமேற்
கருமால் கிடந்து கண்டுயிலுங் காட்சித் திறனும் பொங்கியெழுந்
தண்பாற் கடலேர் குன்றத்தூர்த் தலைவா தாலோ தாலேலோ
சகலா கமபண் டிததெய்வச் சைவா தாலோ தாலேலோ. (உ)

747. முந்தவெழுமாற் றுயர்பொன்னுன் முழுச்செம் மணியான் மாளிகையு
முதுகு ளிகையுந் தெற்றிகளு முகப்பும் பிறவு மமைதலினு
லிந்த நகரம் பொன்னகரத் தினுமிக் கிமைத்தல் விதியுளத்தி
லெண்ணி யாடே யகடேவா மெல்லா வுயிரும் விழியிமைத்த
னந்த வருட்சம் பந்தர்மண நண்ணி யவர்க்குங் கதிகொடுத்த
நலம்போ லிதுசார் புவியகத்து நகர்க்கே லாஞ்செய் தனனென்று
சந்தத் தவர்சொல் குன்றத்தூர்த் தலைவா தாலோ தாலேலோ
சகலா கமபண் டிததெய்வச் சைவா தாலோ தாலேலோ. (௩)

748. முரிவில் வயிரங் கால்யாத்த முழுமா ளிகைபாற் கடல்கடையா
முன்னந் திருமா லுருவொத்து முயங்கு மெனவு மதற்கருகே
பிரிவில் கருநீ லங்குயிற்று பெருமா ளிகையக் கடல்கடைந்த
பின்ன ரன்னு னுருவொத்துப் பிறங்கு மெனவு மதற்கருகே

யெரிவி லிடுசெந் துகிர்மாட மெயில்சூழ் காஞ்சி யடைந்தன்று
னெய்து முருவொத் தலைதென்று மெச்சா வலருங் கொண்டாடச்
சரிவில் வளஞ்சால் குன்றத்தூர்த் தலைவா தாலோ தாலேலோ
சகலா கமபண் டிததெய்வச் சைவா தாலோ தாலேலோ. (ச)

749. சோறு மணக்கு மடங்களெலாந் தூய்மை மணக்குஞ் சிந்தையெலாஞ்
சுவண மணக்கு மாடையெலாந் தொங்கல் மணக்குந் தோள்களெலாஞ்
சேறு மணக்குங் கழனியெலாஞ் செல்வ மணக்கு மாடமெலாந்
தென்றல் மணக்கு மேடையெலாந் தெய்வமணக்குஞ் செய்யுளெலா
நீறு மணக்கு நெற்றியெலா நெய்யே மணக்குங் கறிகளெலா
நெருப்பு மணக்குங் குண்டமெலா நேய மணக்கும் வீதியெலாஞ்
சாறு மணக்குங் குன்றத்தூர்த் தலைவா தாலோ தாலேலோ
சகலா கமபண் டிததெய்வச் சைவா தாலோ தாலேலோ. (ரு)

வேறு.

750. துங்க மிகுத்த வருந்தவ மேவிய தோலா நாத்திரனை
நாமாக் கினியரு டொல்காப் பியமே தோன்று மிலக்கணமாப்
பங்க மிலாச்சம யாதி யடைந்து பராஞ்சிவ சின்னமுறும்
பாக மருஉம்பக் குவரே கேட்கப் படுமெதி காரிகளா
வங்க மெடுத்துழ றன்ப மொழிந்தின் படைவது வேயயனு
வற்புத மேவிய தொண்டர் புராணம தருள்கரு ணைக்கடலே
சங்க மரீஇயமர் குன்றைத் திருமுனி தாலோ தாலேலோ
சைவப் பயிர்தழை யத்தழை யும்புய லேலோ தாலேலோ. (சு)

751. அடியார் பெருமையு மருமையு நாளு மறியம் பலவாண
ரவர்வர லாறு விரித்துரை செய்பவ ராரென வுட்கருதிக்
கடியார் மற்றவ ரன்பத் தனையுங் கண்காண் படிசெய்து
காமரு முதலு மெடுத்தரு ளினரிக் கடல்சூழ் புவியிடையிப்
படியார் பெற்றார் தமிழ்மான் மியமெப் பாடைக ளுக்குளதிப்
பாக்கிய நற்தவ மென்று பலோரும் பகரப் படுபவநிற்
றடியார் தடிசூழ் குன்றைத் திருமுனி தாலோ தாலேலோ
சைவப் பயிர்தழை யத்தழை யும்புய லேலோ தாலேலோ. (எ)

752. பத்திச் சுவைநனி சொட்டச் சொட்டப் பாடிய கவிவலவ
பயனில தாகுஞ் சிந்தா மணிவழி படர்த லெனப்போதித்
துத்திச் சுமையொரு தோள்வைத் திடுபு துயர்த்தோன் மனமடியா
ருறுசெய லுடைப் புரிமதி வலவ வொலாவரு சுத்தர்திற
முத்தித் திறமலை வென்றன விலர்பான் முற்றிச் சிவமடைய
முயல்செயல் வலவ வயற்கண் மடைச்செறி முத்த மனைத்தினையுந்
தத்திப் புனல்பாய் குன்றைத் திருமுனி தாலோ தாலேலோ
சைவப் பயிர்தழை யத்தழை யும்புய லேலோ தாலேலோ. (அ)

753. ஈற்றுத் தலையொரு மவுலி புனைந்தா லென்னச் சொல்லணியொன்
றெய்திப் பொலியப் பொருளணி யாயின வெவ்விட னும்வீற்று

வீற்றுக் கிடையிலை பட்டனை வகைமைய விளம்பு வளப்பிளொடு
 மேய முதற்பொரு ளாதிய மூன்றும் வேண்டுமி டத்தெய்த
வாற்றுப் புனைவு மப்பொருள் தோன்முத லறைமற் றுள்ளனவு
 மமையத் தொண்டர் புராண நவின்றவ வடருபு சூழ்ந்தபசுந்
தாற்றுக் கதலிக் குன்றைத் திருமுனி தாலோ தாலேலோ
 சைவப் பயிர்தழை யத்தழை யும்புய லேலோ தாலேலோ. (௯)

754. மண்டலை வேலைப் புவியிற் பத்திசெய் மார்க்க மறிந்தவரார்
 வண்சுவை யமுத வொழுக்கென வார்த்தை வழங்கத் தெரிகுநரார்
கொண்டலை நேர்பக டேர்தரு கூற்றங் குதித்துயக் கிடவலரியார்
 கொற்றக் கைலைக் கணநாதர் களொடு கூடுபுமகிழ் பவராார்
விண்டலை யாரும் பெறலரு மின்பம் விராவுந் திறலினரார்
 விமலா நீயவ தாரஞ் செய்யா விடினென மேயவனைத்
தண்டலை சூழுங் குன்றைத் திருமுனி தாலோ தாலேலோ
 சைவப் பயிர்தழை யத்தழை யும்புய லேலோ தாலேலோ. (௧௦)

௩.—தாலப்பருவம் முற்றிற்று.

## ௪.—சப்பாணிப்பருவம்.

755. விழையற முதற்கல்வி யறியுநுண் ணறிவுமம் மேதைக் கிணங் கொழுக்கு - மேயவிவை யுடையார்த் தழீஇயவர்சொ லினிதேற்கு மேம்பாடு மாறுகருதா, மழைநிகர் கொடைத்திறனு நனிவரு தினியீட்டு மாண்புமாற் றலரையஞ்சா - வன்மையு மிடங்கால முதலறித லுங்கடிய மாற்றலரி லாத குணமு, முழையரும் விருப்பமறி யாதடக் குதலுநல னேங்குகாட் சிக்கெளி மையு - முடையனிவ னுலகுவத் தற்குரிய னென்றுளத் துன்னியிறை புனைய மணிக, டழையுமுடி தொட்டுக் கொடுத்தருண் மலர்க்கைகொடு சப்பாணி கொட்டியருளே - தண்டமிழ்க் குன்றையாங் குன்றுதித் தெழுபானு சப்பாணி கொட்டியருளே. (௧)

756. கார்க்கோல மாலோன் புரந்தருள்வ னெனுமொழிமு கமனுண்மை வேளாண்மையைக் - கருதவபி தானங்கொள் குலமே யெனப்பனுால் கற்றவ ரியம்ப மறையோர், போர்க்கோல மன்னரெட் டியர்மூவர் புரமெனப் புகன் மூவர் பசிவருத்தம் - போக்கின மெனக்களிப் புறவிலே சருமது புகன்றுமகிழ் தலைசிறப்ப, வார்க்கோல முலைமங்கை பங்கர்தளி முற்பலவும் வண்பூசை யொடு சிறப்பு - மாறாது பொலியமழை வளனுஞ் சிறப்பவள வாப்பெருமை வாய்ந்த மேழி, தார்க்கோ லொடுங்தொடுஞ் செங்கைத் தலங்கொண்டொர் சப்பாணி கொட்டியருளே - தண்டமிழ்க் குன்றையாங் குன்றுதித் தெழுபானு சப்பாணி கொட்டியருளே. (௨)

757. மேவாத பாயுடைஇத் தலைமயிர் பறித்துழறன் மேயசம யப்பாழ்ங் குழி-வீழ்ந்தவர்மு னச்சமய கண்டனம் பேசியது விடவாற்று திருவாயினின், றேவாத பிரதாப மொருகதி ரெனத்தோன்றி யுள்ளகோ கனகமெல்லா - முற மலர்த் திடவவைகை யொப்பாயி னேமென் றுறப்பொலித றேறுபன்னு,ராவாத

மியமெனவ பயநல்கி யுண்மைநிலை யருளுமும்மை யிறைதெழு பாலோ னெனத்
தோன்றி யெல்லாங் குவித்தருளன் னுயிர்களுக் கெல்லாமவைக்குங், காவாத வொளி
ளிர்கி னங்கைத் தலங்கொண்டோர் சப்பாணி கொட்டியருளே - தண்டமிழ்க்
குன்றையாங் குன்றுதித் தெழுபானு சப்பாணி கொட்டியருளே. (ரு)

758. தருமமலர் கொய்துநீ ராடிநீ திப்பசி பசிய கனிருந்துவோரே -
துலங்குமொரு குறியிலா வாசனமெ ழுந்தவொளி தெரண்டிடச் செய்வதன்று,
பெருமவடி யேங்களைப் புரவென்று தாழ்பவர் பொருந்துசெல்வ மெய்தியைய -
பிறங்குளா ராயணவு பரிட்ட முறைத்தடம் பெற்றவர் விளங்கவணக்கங், கருமமுத
லெம்மலமு நீத்தின்ப மெய்தக் கடைக்கணித் திருக்கியருள - கலிக்குவேண்
டுவதன்று சிறுவருத் தமுமிலாக் காரிய மெனாவிருந்தேத், தருமசிவ கரமாங்
கரங்குவித் தையவொரு சப்பாணி கொட்டியருளே - தண்டமிழ்க் குன்றையாங்
குன்றுதித் தெழுபானு சப்பாணி கொட்டியருளே. (சு)

759. எண்ணியவை யெண்ணிய பயக்கவடி யவர்க்கருந மீசனருளா
லருளுரு - வீனசம யத்தொடக் கெல்லா மொழித்தவர் செய்கைதட் டுதலு
மோவாத், திண்ணிய மலச்செருக் கெல்லா மொழித்தனைத் தீர்த்தவ வாதை
யென்று - செப்பிக்கை தட்டுதலு மிக்கிரன் மார்க்கமும் தெரிந்துதா யவன்வாழ்
க்கையு, நண்ணிய வெழுங்கருத் துந்தவிர்க் கவென்று காடிக்கை தட்டுதலு
னேர் - நவிலநம் பரமகுரு சாமியென் றியாவரு மக்கவை தாரத்செய்தாய்,
தண்ணிய மலர்க்கைத் தலக்குவித் தையவொரு சப்பாணி கொட்டியருளே -
தண்டமிழ்க்குன்றையாங் குன்றுதித்தெழுபானு சப்பாணி கொட்டியருளே. (ரு)

வேறு.

760. வம்பிட் டொளிர்முலை மாதுமை காண மணிப்பொது நடனஞ்செய்
வார்முன மனைநின் றருகிட நீற்றன் மதித்தவர் முதலாக்க
நம்பிட் டருமறை யோர்கை குவித்து நயந்து வியந்திடவே
நறுவிரை நல்கி யலங்கல் புனைந்து நகும்பரி வட்டமெடுத்
தம்பிட் டொளிர்சடை யவரே யிவரென் றைய மறத்தெரியா
யாத்திடு முன்னர் நன்னர் விபூதிய தன்றருபு கொள்ளுகெனக்
கும்பிட் டேற்ற திருக்கை குவித்துக் கொட்டுக சப்பாணி
கொற்றச் சேவையர் காவல நாவல கொட்டுக சப்பாணி. (சு)

761. உண்ட லுடுத்தன் மணத்தன் முதற்பல வென்றவு சுன்னயமா
ருத்தம வென்றடை யாதுல ரெண்ண மொருங்கு தெரித்தனையார்
தண்ட விலாமகிழ் பூப்ப மலர்க்கைத் தலங்கிரி யாதுகுவி
தருமொர் பழக்கமு முள்ளதி யாங்கள்செய் தவம்வழி தாங்கொல்லோ
கண்டல் செறிந்த கருங்கடல் வண்ணன் கலிகெழு பாற்கடன்மேற்
கண்டுயில் வதுபொர வெண்சுதை தீற்றிய காமரு மாளிகைமேற்
கொண்ட லுறங்குங் குன்றத்தூரன் கொட்டுக சப்பாணி
கொற்றச் சேவையர் காவல நாவல கொட்டுக சப்பாணி. (எ)

762. படியிடை யொருபை திரவரு ணனைபுரி பாவல ரைந்திணையும்
பகுத்தொரு மூப்பொரு ளோடும் விரித்துப் பயனு கத்தெய்வங்
கடிதலில் சினைமர முள்ளன வோதக் கற்பித் தவநெஞ்சங்
கனியக் கனியக் கண்ணீர் வாரக் கவிபா டியவிறைவ
வொடிவரி தாமிரு பன்னிரு கோட்டத் துள்ளொரு கோட்டமலா
தொருகோட் டமுமுற வில்லாய் நல்லா யுலவா வளமைப்பல்
குடிக ணெருங்குங் குன்றத் தூரன் கொட்டுக சப்பாணி
கொற்றச் சேவையர் காவல நாவல கொட்டுக சப்பாணி. (அ)

763. நாடிய விரிநூல் சொற்றிடு திறனு னன்னூ லாசிரிய
னருபா சுரமுத லுரைசெய் தலினு னவிலுரை யாசிரிய
னீடிய பரசம யக்குழி வீழ்ந்தவர் நீப்பப் போதனைசெய்
நிலையாற் போத காசிரி யன்னிவை நிகழ்தொறு நிகழ்தோறு
மாடிய ஞானத் திறனுற லான்ஞா னாசிரி யனுநீயென்
றுன்றோர் பலரும் புகழப் படுபவ வகில மெலாஞ்சென்று
கூடிய புகழ்சால் குன்றத் தூரன் கொட்டுக சப்பாணி
கொற்றச் சேவையர் காவல நாவல கொட்டுக சப்பாணி. (கூ)

764. நிலவிய நாகே சுரரினி தமர்தலி னிகழ்நா கேசுரமாய்
நீலமணி மாட நிலாவலி னிந்திர நீல பருப்பதமாய்க்
கலவிய செம்மணி மாடத் தாலொளி காலர தனகிரியாய்க்
கருடப் பச்சை நிலாவியா வோருங் காண்மர கதமலையா
யுலவிய வெண்சுதை நீற்று நிலாலோங் கொருகை லைக்கிரியா
யுத்தம மார்பல வேதுவி னுலினு முறைதரு பற்பலவாய்க்
குலவிய வளமார் குன்றத் தூரன் கொட்டுக சப்பாணி
கொற்றச் சேவையர் காவல நாவல கொட்டுக சப்பாணி. (கo)

ச.—சப்பாணிப்பருவம் முற்றிற்று.

# ரு.—முத்தப்பருவம்.



765. திருப்பஞ் சாதி மறையுணர்மட் டேவ ராதி நால்வர்களுஞ்
செறிந்த மற்றை மூவர்களுந் தீரா விருவல் வினைத்தொடர்பா
லுருப்பஞ் சாரும் பிறந்தைமீஇ யுறமேற் போயுங் கீழிழிந்து
முழற லாய பெருந்தாக மொருங்கு மாய்த்தின் பொருங்கடைய
விருப்பஞ் சாரு மெய்யடியார் மிக்க தொகையா ரொன்பதின்மர்
மேய தனியா ரறுபதின்மர் மேலு மூவர் சரித்திரமாங்
கருப்பஞ் சாறு பொழிமதுரக் கனிவாய் முத்தந் தருகவே
கரைகக் குன்றை யனகசெழுங் கனிவாய் முத்தந் தருகவே. (க)

766. எண்ணிற் பொலிபல் புலவர்குழாத் தெய்தி நம்மோ டியாமொருவே
மென்று கூறி யெம்பெருமா னிருந்தாய் தருமன் னயமுடைத்தாய்
மண்ணிற் பொலிபு கயிலாய வரைக்க ணிவர்தம் மாதேவர்
வடிகா தகம்புக் குள்ளுருக்கும் வாசகமே யுடைத்தாய் வளத்தருவாழ்
விண்ணிற் பொலிவார் களும்வியப்ப வெள்கொன் பழத்திற் குயிருளி
வெங்க ராக்கொண் டதுமீட்கு மிக்க விறலிற் றவெங்கள்
கண்ணிற் பொலிசெந் தமிழ்மணக்குங் கனிவாய் முத்தந் தருகவே
கனகக் குன்றை யனகசெழுங் கனிவாய் முத்தந் தருகவே. (உ)

767. சொல்லும் பொருளு நனிசிறப்பச் சுருங்கச் சொல்லன் முதலாய
தோட்டி யமைய மங்கலமாஞ் சொற்க ளுணரா தறக்களைந்து
வெல்லுந் தகைய முரண்காட்டி விலக்கு விலக விதிதழுவி
விரும்பு மூல விலக்கியமே வேறு காதென் றலகேத்த
வல்லும் பகலு மம்பலவ ரருடற் காய வரும்பயனித்தெய்
தருள்பெற் றுய்ந்த வடியார்த மருமை பெருமை பாராட்டிக்
கல்லுங் கரையக் கவிபாடுங் கனிவாய் முத்தந் தருகவே
கனகக் குன்றை யனகசெழுங் கனிவாய் முத்தந் தருகவே. (ந)

768. எண்ணி யிதுசெய் திடினிதனு லெய்தப் படுவ திஃதெய்தா
திரியப் படுவ திஃதுண்மை யெய்தப் படலாற் பயனின்றே
நண்ணி யவதை மறந்தொழிக வள்ளார் முன்மே விப்பொழுது
நயந்து படர்ந்து பொருவமே யமதே யாரு முருவாகை
தண்ணி மயம்போற் புகழ்ப்போர்வை தாங்கத் காய கருமமிது
தப்பா தாற்றப் பொருள்வருமா யவா தன் னடமென் றிவைமுதலாங்
கண்ணி வளவற் குரைத்தருள்செய் கனிவாய் முத்தந் தருகவே
கனகக் குன்றை யனகசெழுங் கனிவாய் முத்தந் தருகவே. (ச)

769. நிலஞ்சார் தெய்வக் கற்பகமே நிமல ஞான வாரிதிய
நீடுஞ் சைவப் பெருவாழ்வே நிலவா நின்ற குணக்குன்றே
வலஞ்சார் பெருநா வலரேறே மாறு வருட்சிந் தாமணியே
மதிப்பார் மதியு ளெழுஞ்சுடரே வாழ்த்து வார்தம் பெரும்பேறே
புலஞ்சார் பத்தி விளைநிலமே போக்கு வரவில் பூரணமே
புந்திக் கினிக்குஞ் சுவையமுதே போற்றி யினிமே லொருதாயர்
கலஞ்சார் முலைப்பா லருந்தாத கனிவாய் முத்தந் தருகவே
கனகக் குன்றை யனகசெழுங் கனிவாய் முத்தந் தருகவே. (ரு)

வே று.

770. நாலாறு தேர்ந்தவ ருருத்திரமக் குண்டங்க ளுக்கியமுதல் பாயமேய
நுவல்புலவ ருதாரகுண் டத்திற் சுருப்பாய நோன்மைசான் மேகமேல்
சாலாறு பாயவலை யெறியுததி பாயத் தவாதருவ் வரைகள் பாயத் [லாஞ்
தைடலார் குரிசிலார் மேற்சம்ப ராரிபொழி சரமெலாம் பாயமலரிற்
காலாறு பாயவம் மலர்மதுப் பாயக் கமழ்ந்தபட் டத்தினின்றுங்
கற்பங் கமுத்தொடிய வாளைபா யப்பொய்கை கருமேதி பாயமிக்குப்
பாலாறு காலாறு பாய்தொண்டை நன்னாட பவளவாய் முத்தமருளே
பரவுசீ ருலகெலாம் விரவுசே வையர்பிரான் பவளவாய் முத்தமருளே. ()

771. மேயபல வாரியர் குழாத்தினுட பூரியர் விரா்யதென வாயதூய - வெள்ளோதி மக்குழா நிலைகுலைய மேதிகால் விசைத்தெழீஇப் பாயவாங்க, ஞ்ப வெடி வாளையோர் பருகிலாங் கலிமோத வதினுதிர் பழத்தின்வெருவி - யம்மேதி கரையேற வதுகண்ட வவ்வாளை யாடவா லாமைதிரத், தூயநெடு வாலீர் துளைத்தாடி மீளிற் றெடக்குநீங் காமையெண்ணிச் - சோதிமதி மண்டலங் கிண்டமுத தாரையொடு துனையக் கிழக்கிறங்கும், பாயதட மலியுந் திருத்தொண்டை நன்னாடை பவளவாய் முத்தமருளே - பரவுநீ ருலகெலாம் விரவுசே வையர்பிரான் பவளவாய் முத்தமருளே. (எ)

772. மிக்குவரு வெள்ளத் தெதிர்ந்தேறு பருவரால் வேகந் துருண்டு போதும் - வேழத்தைமுட்டிபு வெகுண்டுவெடி கொண்டுதாய் விண்ணந் துளைத் துவிரைவிற், புக்குமகிழ் மழவிளங் கன்றது தெறித்தெழீஇப் போயதெங் கென்றுநாடும் - புந்திப் பெருங்காம தேனுவின் மடித்தலைப் பொம்மல்குழை வெய்த முட்டத், திக்குநிக ழுப்பசுப் பொழிகின்ற பால்வரால் செய்தபுழை யூடிறங்கித்-திரைகரை யெறிந்துவரு குடிஞைக்கு முன்புதான் செய்தபெய ரைப்புதுக்கும், பக்குநவி லருவளம் படுதொண்டை நன்னாடை பவளவாய் முத்தமருளே - பரவுநீ ருலகெலாம் விரவுசே வையர்பிரான் பவளவாய் முத்தமருளே. (அ)

773. வீங்குகரு மேதிபிணர் படுதட மருப்பினுல் விடுபடாக் கடுவேலிவாய் - விடநீக்கி யுட்புகூஉ மென்கரும் பினைமென்று மென்றுதின் றிடவழிதரா, வாங்குநிகழ் சாறப் படப்பையை நிரப்பிமே லாம்பையந் தடவைமோதி - யாறுகி நெற்போ ரடங்கச் சுமந்துசென் றலையாழி யிற்கலந்து, தேங்குதிடர் செய்துவரு மாற்றியந் தமிழ்வாய்ச் செறிந்துவா லாவிணிமையாய்த் - திகழ்கின்ற தென்றெண்ணி யாடுநர்க ளுண்டுமகிழ் தேக்கவெங் நாளுஞ்செயும், பாங்குபடு செல்வமென் பாற்றொண்டை நன்னாடை பவளவாய் முத்தமருளே - பரவுநீ ருலகெலாம் விரவுசே வையர்பிரான் பவளவாய் முத்தமருளே. (க)

774. நீளைநேர் மாதரொடு காளைநேர் மைந்தர்க ணெருங்கிவிளை யாடுபாலி - நெடுவெள்ள முவராழி யுட்புக வனுர்குழீஇ நிறைமலர்கொய் பொழில்வாவிவாய், வாளைதா யெழவிடபம் வைகுதேத் தடைகிற மடையுடைந் தென்னவழியு - மதுவெள்ள மும்புகக் களமர்கள் கருப்பாலை வழிசாற்று வெள்ளமுமெழீஇ,யானைமோ தும்படி புகக்கண்ட வறிஞரே மூழியு மிதஞ்கணுய-வான்றநுண் ணறிவினு ராயினென் றேத்தவமை யாப்பெரு வளங்குலாவும் - பாளைவாய் கந்திமென் பாற்றொண்டை நன்னாடை பவளவாய் முத்தமருளே - பரவுநீ ருலகெலாம் விரவுசே வையர்பிரான் பவளவாய் முத்தமருளே. (கo)

௫.—முத்தப்பருவம் முற்றிற்று.

---

## ௬.—வாரானைப்பருவம்.



775. மண்டல மதிக்குமணி யாத்தவுச் சிப்பூவும் வண்பட்ட முஞ்சுட்டியும் - வாகுவல யமுமதா ணியுமுதய வெயில்செய மகத்துவத் தொண்டர்சீர்த்தி, விண்டல மதிக்கவெழு வெய்யவாய்ப் புகழெழுதல் விழையவெழு குறு

வேறு.

780. நலத்தி னுயரும் பழையனூர் நாளும் பொலியு மவையகத்து
நலிவு புரிநீ லியைக்கண்டு நடுங்கா நின்ற வணிகனுக்கு
நிலத்தி லியனின் னுயிர்க்கிறுதி நேரு மாயி னியாமெல்லா
நெருப்பின் முழுகி யுயிர்துறப்போ நீயோ ருதியென் றுரைத்தபடி
வலத்தி னுயரச் சொற்றவறு வண்ண மெழுநாக் குழிமுழுகி
வடவா ரணியத் தாடொருவர் மலர்த்தா ளடைந்த வெழுபதின்மர்
குலத்தி னுதித்தா ருண்மழைபெய் கொண்டல் வருக வருகவே
குன்றைப் பொருமா ளிகைக்குன்றைக் கோமான் வருக வருகவே. (சு)

781. அண்ட மளவும் வரைநாட்டி லரசர் கலக மாதலினு
லாங்காங் கொருவி வணிகரெலா மயனுட் டகம்புக் கினிதமர்ந்து
விண்ட கலகத் திறந்தெரிந்து மேய தத்த மிடம்புக்க
விதமுள் ளுணர்ந்து தஞ்சாணு மேவி யிருந்த மடக்கொடியை
மண்ட வழைத்துக் கொடுசென்றிம் மடமா தினைக்கொள் ளுதிரென்ன
மயங்கல் கண்டு தங்கையெனும் வாய்மை கொடுமைத் துனக்கேண்மை
கொண்ட குலத்தி னுதித்தருள்பெய் கொண்டல் வருக வருகவே
குன்றைப் பொருமா ளிகைக் குன்றைக் கோமான் வருக வருகவே. (எ)

782. விற்றங் கியலி பூதியினல் விளர்ப்புற் றன்பின் வழியியங்கி
வேறு வேறும் பரசமய வெய்ய கோடை முழுதொழியச்
சிற்றம் பலவா யகர்கருணைத் திரைவா ரிதியிற் படிந்துண்டு
திசையெங் கணுந்தோற் றிடமின்னித் தீய வொழுக்கந் தபக்கறுத்துக்
கற்றங் கமையார் மலத்துன்பங் கழல வரமா முழக்கெழுப்பிக்
கருதா நின்ற திருத்தொண்டர் காமர் வாய்ந்த சரித்திரமாங்
கொற்றம் பொலியு மழைபொழிந்த கொண்டல் வருக வருகவே
குன்றைப் பொருமா ளிகைக்குன்றைக் கோமான் வருக வருகவே. (அ)

783. வின்று மலரா தனத்தானும் வெய்ய சதுரி சனத்தானும்
விரும்பு மதிகா ரக்கதையா விளம்பா நின்ற கோல்கொள்ள
நன்றும் பிரம சரியரெலா நாடும் பலாசக் கோல்கொள்ள
நான்கா மாச்சி ரமத்தமைந்தார் நயந்து முந்நூழ்க் கோல்கொள்ளத்
தென்றும் வணிகர் குலமெல்லாந் தேற்றுந் துலாக்கோ லதுகொள்ளச்
செம்பொன் மோலி யரசரெலாஞ் செங்கோல் கொள்ளச் சிறுகோல்கைக்
கொள்ளுங் குலத்தி னுதித்தவருட் கொண்டல் வருக வருகவே
குன்றைப் பொருமா ளிகைக்குன்றைக் கோமான் வருக வருகவே. (கூ)

784. என்றுந் திறத்துப் பரசமய நேறு வருக நேறுதலி
லெங்க ளுணர்வின் கணுமதுரித் தினிக்கு மிருங்கோற் றேன்வருக
தென்றும் புலத்தர் பெறுகாம தேனு வருக வருகந்தர்
சிந்தா மணியைப் பொருட்படுத்தாச் செல்வச் சிந்தா மணிவருக

வுள்ளு மவருக் கெய்ப்பிடைவைப் பொத்துள் ளொழுகொள் ளொளிவருக
வொழியாப் பத்திக் கடல்வருக புலவா தமைந்த சிவபோகங்
கொள்ளுஞ் சைவப் பயிர்வளர்க்குங் கொண்டல் வருக வருகவே
குன்றைப் பொருமா ளிகைக்குன்றைக் கோமான் வருக வருகவே. (க0)

கு.—வாரானைப்பருவம் முற்றிற்று.

## எ.—அம்புலிப்பருவம்.



785. பாடுமதி யோனெனப் படுதலால் வாய்விண்டு பதினு யிரஞ்சுரும்பர்
பண்பாட வின்னறவு வீசுகழு நீர்மாலே பாய்ந்துற வுவந்திடுதலா
னீடுசுடர் படுசம்பு வொடுகூட லாற்கலை நிரம்பத்தழைத்திடுதலா[மையால்
னெடியவம் பரவையல தத்தோன்றலாலென்று நிகழ்சார்ந்த மேயுடை
வாடுதலில் சேக்கிழா ருதலா னகுமேர் வளர்ந்தழுவ லாலெமையன்
மானுத தெரிந்துவரு கொன்றைத் தாமமைமெய் வானங் கிழித்து
யாடுகொடி மாளிகைக் குன்றைநக ராளியுட னம்புலீ யாடவாவே[மேற்போ
யருளுருத் தேசுபொலி யருண்மொழித் தேவனுட னம்புலீ யாடவாவே.

786. மேயவம் போருக மெலாங்குவி கரத்தினை விராமனை யடங்கவள வா - வியன்சாலி யொடுபொலிய மகிழ்வையா லோரறவர் விழியின்வெளி வந்தொளிருவை, பாயபர மன்சடா டவியமரும் வரகதிப் பந்துமூனை நத்தமர்கரப் - பண்ணவனு மிகையெனப் பல்லுயிரு மோம்பிடப் படிகாருவி யாய்கின்றனை, நேயமிகு மிவையாதி யாலெங்கள் பெருமானை நிகரா திராயடுக்கு - நிலையேழு கொண்டமையி னுலகேழு மேயென நிரம்புபா வலர்புகழுதற், காயமணி மாளிகைக் குன்றைநக ராளியுட னம்புலீ யாடவாவே - யருளுருத் தேசுபொலி யருண்மொழித் தேவனுட னம்புலீ யாடவாவே. (உ)

787. இரவோ னெனத்திரிவை நீமகாப் பிரபுவென வெங்களை யன்பொலிகுவ - னிகழ்ச்சிசால் கள்வனை யுவப்பைநீ யுவவாம லிவன்வெறுப் பானென்று, மரவோனெனம் வள்ளலே நல்லோ னெடுத்தினி யுரைப்பதெவ னியல்லோனே - யுயர்விற லெமன்வான வன்கா னுரைப்பா ருனக்குமொரு தானவப்பேர், பரவோனை வாதவ னெனல்குறித் தல்லவோ பாதிகொண் டானின்னை யெம் - பண்ணவனே முழுமையுங் கொண்டனன் காண்மணிப் பணியெனத் தோள்புனைந்த,வரவோ னுணர்ந்திடுதி குன்றைநக ராளியுட னம்புலீ யாடவாவே - யருளுருத் தேசுபொலி யருண்மொழித் தேவனுட னம்புலீ யாடவாவே. (௩)

788. சாறுசால் வீதித் திருத்தில்லை யம்பலந் தன்னிலெஞ் ஞான்று நின்று - தாண்டவ நவிற்றியுல குய்யச் செயும்பரம சற்குரவ னினிதுசெய்யும், பேறுமே வியவனுக் கிரகமுழு தும்பெற்ற பெரியோ னிவற்கு வானோர் - பேணுகுர வன்பாங்கர் நிக்கிரக மேபெற்ற பேதைநீ மாற்றுயர்ந்து, வீறுசெம் பொன்னே டிருப்பொத்த போதினும் மேவொப் புருமை மன்னும் - விண்ணுமுணருங்கருணை நினையழைத் தஃதிந்த விதமோர்ந்து கொடியோடும்வா, நூறுதோய் மாளிகைக் குன்றைநக ராளியுட னம்புலீ யாடவாவே - யருளுருத் தேசுபொலி யருண்மொழித் தேவனுட னம்புலீ யாடவாவே. (௪)

789. எம்மையினி தாள்பவன் செம்மைமதி யவனீ யியற்கையே டெண்மை மதியோ - னெற்றைக்கு மிகுதண்மை யுடையாரோ டுறவுகொளு மியல்பிலை யெங்களையன், வெம்மையுடை யவர்களொடு மதிதொறும் மதிதொறும் விரா யுறவு கொள்ளுவேலீ - வியக்குமொரு தன்மையோ னெங்கள்திரு பாலமூர்த்தி மெய்ம்மையொரு கால்வளருவாய், மும்மைபுல கறியவொரு காற்றேய்கு வா யிவை முயங்காதொர் காலொழிகுவாய் - மொழியுநீ யிவையோர்ந்து மாடவா வென்றது முழுக்கருணை காணெஞ்ஞான்று, மம்மையனை யார்மருவு குன்றைநக ராளியுட னம்புலீ யாடவாவே - யருளுருத் தேசுபொலி யருண்மொழித் தேவ னுட னம்புலீ யாடவாவே. (௫)

790. குறையுடைய பாம்பொன் றெடுத்துண் டுமிழ்ந்திடக் குலைகுலைந் துழல்வை யெங்கள் - கோமான் பெருங்கல்வி யாட்சியை யுணர்ந்துசெங் குரு மணிச் சூட்டுமோட்டு, சிறைவுகெழு துத்திப் பணாடவிப் பாம்பொன்று நேர டைய மன்றுணுனு - மிணையின்ற தெருபரவை யிலகுவே பாரமென வென்னு னைத்தனையு மெண்ணேன், முறைபிறழு சிறுநூக்கி னெழுபரவை யும்புக முடித்துற நிறுத்தானிவன் - மொழியெங்க டம்பிரான் வல்லப முணர்ந்திலை கொன் முத்தமா ளிகைவானயாற், றறைமணித் திடராய குன்றைநக ராளியுட னம்புலீ யாடவாவே - யருளுருத் தேசுபொலி யருண்மொழித் தேவனுட னம் புலீ யாடவாவே. (௬)

791. செறிதமிழ்ச் சங்கத்து முதன்மையோ னென்பினைத் திணையென நவின்ற நூலிற் - செப்பிய விதிப்படிக் கரிகுழைத் தெழுதுகட் செய்யவாய் வெண்ணகைநலார், முறிவற வணங்குதோ றெருவிடுத லால்வளரு மொய்ம்பு பெற்றனையொநாளு - மொய்த்தவொரு விடுதலத லல்வளர்த லுழவுதொழின் முயலிவன் காட்டுதொழிலே, மறிவரிய விந்நன்றி யள்ளுணர்ந் தனையென்னின் வாரா திருப்பை கொல்லோ - மதியோ னெனும்பெயர் குறிப்புறு மற்கவிக மகன்வாதி வர்க்கியாய, வறிவர்கழ கம்பரவு குன்றைநக ராளியுட னம்புலீயாட வாவே-யருளுருத் தேசுபொலி யருண்மொழித் தேவனுட னம்புலீ யாடவாவே.

792. பெருநாவ லோவெனு முழக்கறு மென்பாற் பிறங்குபயிர் கொடி செடியெலாம்-பேணுங் கருக்கொள்ள நீயுப கரித்தலுட் பேறு திருந்தானலன், திருநாவ லூரர்சி காழியார் கூனறத் திருவாய் மலர்ந்த தொப்பச் - செயிர் கொணின் கூனொழிப் பான்வாய் மலர்ந்துகூன் செய்யுளினு முறவைத்திலா, னொருநாவ லொடுபெயர் பெறும்பொலத் தினுமருமை யுறநவில்புராணத்தினோ - ரொப்பிலா வெங்கள்பெரு மானட்பு மதிநிற் குயிர்க்குறுதி செய்வதாகு, மரு நாவ லோர்பரவு குன்றைநக ராளியுட னம்புலீ யாடவாவே - யருளுருத் தேசு பொலி யருண்மொழித் தேவனுட னம்புலீ யாடவாவே. (௮)

793. தலைமயிர் பறித்துமரை யிற்பா யுடுத்துந் தழைத்திரள்கை வைத்து முழலுஞ் - சழக்கர்மத மாங்களங் கம்பரவ வீக்கியுயர் சைவநிலை யெங்குமாக்கு, நிலையுடைய தம்பிரா னின்களங் கம்போக்கி நிகழ்புனித மேயாக்குவா - னீடு மிதன் மேலுறுதி யென்னைகொ லினக்கின்னு நேரளப் பரியசான்றோர், கலை

பலவு மோருருக் கொண்டனைய னருளோனுக்கு காதலார் சிறக்கவுகினைக் - கடைக் கணித் தாடவா வென்றழைத் தனுபெருங் கருணையே கங்கை யிறுமிக், கலை மருவு புனல்வளக் குன்றைநக ராளியுட னம்புலீ யாடவாவே - யருளுருத் தேசு பொலி யருண்மொழித் தேவனுட னம்புலீ யாடவாவே. (கூ)

794. காதலொடு வாவென் றழைத்தவுடன் வந்திலான் கருதியதெ னென்று சற்றே-கறுக்கச் சிவந்தல்கூ டாதுநாண் பூண்டான் களங்கத் திறத்தி னென்று, போதலுற யாம்புகன் றேமினி முனிந்திடற் போக்குவே றில்லையா கும் - புன்மையா னிவனென்றோர் கவிகூறின் முக்கட் புராதனனை முனிவெறுப் பன், வீதலுற லேயன்றி வேறொன்று முள்ளதுகொல் வினைகுவ தனைத்துமோர் ந்து - மேயினேன் மேயினே னென்றடையி னலமுண்டு மேலுலக வாழ்க்கை யோர்மிக், காதலுற விழைதருங் குன்றைநக ராளியுட னம்புலீ யாடவாவே - யருளுருத் தேசுபொலி யருண்மொழித் தேவனுட னம்புலீ யாடவாவே. (கo)

எ.—அம்புலிப் பருவம் முற்றிற்று.

---

## அ.—சிற்றிற் பருவம்.

795. வாருந் திருவீ தியினொருசார் வண்ணத் திலங்கள் கொடுமுயன்றில்
வகுக்குந் திறத்தே யறிவுசெலு மாண்பா னினது வரவுணரா
தாருமிருக்கை யெழாதிருந்தே மகிழ்ந்து தருக்கி யிருந்திலமா
லண்ண லவைந்துட் கொண்டுபகை யமையப் பாராட் டுதலழகோ
வோரும் புகழ்க்கற் பகத்தளிக ளொருங்கு மொய்ப்ப தெவனென்றே
யும்பர் நடுங்கி நிலைகுலைய வொருவேற் றுமைபு முணர்வரிதாச்
சேரும் பொழிற்றண் டகநாடா சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செல்வஞ் செருக்கு குன்றையருட் செல்வா சிற்றில் சிதையேலே. (க)

796. ஒழிக்குந் திறத்தி னருகந்த னுறையாநின்ற பாழிகொலவ்
வுறுவ ரமரும் பள்ளிகொண்மற் றுள்ளா ராய பரசமயர்
பழிக்கும் படிவா ழிருக்கைகொல்யாம் பாங்கிற் புரியிச் சிறுவீடு
பதத்திற் சிதைத்தால் வருகின்ற பயன்புண் ணியமோ புகழ்கொல்லோ
சுழிக்குஞ் செலவிற் பாலிநதி சுரந்து பாய மாலியானைத்
தொண்டை யெடுப்பு மறையும்விதந் துவன்றி வார்ந்து விளைசெந்நெல்
செழிக்கும் வயற்றண் டகநாடா சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செல்வஞ் செருக்கு குன்றையருட் செல்வா சிற்றில் சிதையேலே. (உ)

797. வெய்ய வமையும் பரசமய விருப்பஞ் சமந்த திருவில்லார்
வினையைச் சிதைத்தி யவர்மாயை வீயச் சிதைத்தி யாணவமு
மையச் சிதைத்தி யிவைசிதைத்தா லுடும் புகழ்புண் ணியமிரண்டு
நாளு நினக்கு மேன்மேலா நகையா மெங்கள் செயல்சிதைத்தல்
வையம் வியக்குஞ் செங்கரும்பும் வாழைக் குலையும் பசுங்கமுகும்
வயங்கு மிளநீ ரிலாங்கலியு மகவா னவைக்கோ ரலங்காரஞ்

செய்ய வுயர்தண் டகநாடா சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செல்வஞ் செருக்கு குன்றையருட் செல்வா சிற்றில் சிதையேலே. (ங)

798. பொருந்து நிலத்தே நானுழுதல் புகழாம் விதியு மதுவாகும்
பொருந்தா நிலங்கா லானுழுதல் புகன்ற விரண்டு மொன்றுமோ
வருந்து மரிய திருவடியு மண்டு புழுதி யடையுநறு
மலர்தோய் பவைமற் றிதுதோய்தல் வழக்கோ கண்டார் சகிப்பாரோ
முருந்து முறுவன் மடமாதர் முயங்கும் பொழில்வாய்க் கருஞ்சுரும்பர்
முரலா நின்ற பண்கேட்டு முகந்து கொடுக்கும் பொற்காசிற்
செருந்து மலர்தண் டகநாடா சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செல்வஞ் செருக்கு குன்றையருட் செல்வா சிற்றில் சிதையேலே. (ச)

799. உற்றார் சகியார் புனலாட்ட லுரியார் பலரு மடிக்கடியில் [திற்
வொல்லாப் புழுதி தோய்வெவனென் றுரைப்பார் தவஞ்செய் தருமருந்
பெற்றார் செவியோ ரினும்பதைப்பார் பிறங்கக் காணி லென்படுவார்
பேசா வருமை பாராட்டிப் பேணி யெடுப்பா ரையுஞ்சினப்பார்
கற்றா ரரிய நூல்பலவுங் கண்டார் விளங்க நூலினுரை
கரைந்தார் வரைந்து சிவனடியிற் கலந்தார் கடிந்து பரசமயஞ்
செற்றார் செறிதண் டகநாடா சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செல்வஞ் செருக்கு குன்றையருட் செல்வா சிற்றில் சிதையேலே. (ரு)

800. தாங்கும் வளவ னனபாயன் றன்கண் மணியா யவனமைச்சர்
தங்கள் சூளா மணியாயுத் தமச்சோ ழப்பல் லவனெனும்பே
ரோங்கும் படிகொள் விண்மணியா யுவக்கு மடியார் சரித்திரமுற்
றுரைசெய் தருள்சிந் தாமணியா யுயர்வு பூணி னிளம்பருவ
வாங்கும் பிறைநன் னுதலார்செய் வண்டல் சிதைக்க வேண்டுவதோ
வாழைக் குருத்து மதிநடுப்போய் மாங்கன் குடைக்கோர் காம்பாகித்
தேங்குந் திருத்தண் டகநாடா சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செல்வஞ் செருக்கு குன்றையருட் செல்வா சிற்றில் சிதையேலே. (சு)

801. ஏத மகல வளவன்முன மேற்று குடிக ளொருநாற்பத்
தெண்ணு யிரத்து மொருகுடியென் றியம்பே மபய னமாத்தியருட்
போத மருவு மொருவ னெனப் புகலேம் புராணஞ் செய்தாருட்
பொலியு மொருவ னெனநவிலேம் புகலின் மூவ ருளுமொருவ
னுத மகன்ற பரமனென நவிலி னடைவ தடையுமென
னன்று தெரிந்தே மெங்கள்செய னயவா திருக்குந் திறமென்னே
சீத வளத்தண் டகநாடா சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செல்வஞ் செருக்கு குன்றையருட் செல்வா சிற்றில் சிதையேலே. (எ)

802. பொன்னஞ் சிலம்பு புலம்படிமண் பொருந்தித் துளையும் விழைவடையிற்
பொலியும் பற்ப லுபநிடதம் புகறல் கேட்டு நீயுருவு
முன்னங் கொள்சிற் சிலர்நுதலின் முயங்கிப் படிந்த மண்டோய்ந்து
முருங்கத் துளைதல் கூடிற்னம் மோக மவர்நீத் துய்வாரே

கன்னங் கரிய கடாப்பாய்ந்து காமர் பொய்கை நீர்கலக்கக்
கழிந்தோட் டெடுக்க வராலெழுந்து கடிக மோதப் பலவுதிருந்
தென்னம் பழத்தண் டகநாடா சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செல்வஞ் செருக்கு குன்றையருட் செல்வா சிற்றில் சிதையேலே. (அ)

803. மாறு படுமன் னவரெனினும் வாளவன் கழற்கா ளுழினவர்வாழ்
மணிமா ளிகைகண் மிக்குயரு மாறு விடுப்பாய் மறையோர்முற்
கூறு படுசம் பரனடியார் குறிப்புங் குணர்ந்து செவ்வாறுங்
குறுக நிமிர்மா டங்கள்பல குயிற்றிக் கொடுத்துக் குடியமைப்பாய்
வேறு படுமா றியாம்வகுத்த வீட்டை விடுத்துச் செவிலவரலென்
வேழக் கரும்பின் சாற்றுடி விரிந்த கரம்பும் பாய்ந்துகுழை
சேறு படுதண் டகநாடா சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (கூ)

804. அலைக்கும் புனல்சூ ழம்பலத்தி லாடும் பெருமா னருள்பெற்று
லவன்செய் தொழிலோ ரைந்துண்டு வமைந்த தொழிலோ மேற்கோட
னிலைக்குங் கடையென் றொழித்தனையோ வினையா விற்கு மனுக்கிரக
நீயே யதுசெய் யாவிடினெங் கிரப்பு நீக்கு பவரியாரே
மலைக்கும் பிறவிப் பிணிமருந்தே வாழ்த்து வார்சிந் தாமணியே
வயங்குஞ் சைவப் பெருவாழ்வே மாறாக் கருணை மாக்கடலே
சிலைக்குந் தமிழ்த்தண் டகநாடா சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செல்வஞ் செருக்கு குன்றையருட் செல்வா சிற்றில் சிதையேலே. (க0)

அ.—சிற்றிற்பருவம் முற்றிற்று.

---

# கூ.—சிறுபறைப்பருவம்.



805. ஆயபர சமயக் கருங்கடா யானைக் கரிக்குருளை வாய்முழக்கு-மரும்புகழ்ச் சைவப் பசும்பயிர்க் குலகுரு மூழ்குயுண் புயன்முழக்கும், பாயமிடி யாளருக் களவில்லொன் செறிசெய்த பண்டார வாய்திறந்து - பலவுங் கவர்ந்திடுமி னெனவெறித் திடுகொடைப் பயன்முரசி னெழுமுழக்கு, நேயமிகு வளவர்பெரு மாற்காக வப்பாரி னேர்ந்ததன் படையெழுப்பு - கிலாம்பணை முழக்குமாகக்குணின் மலர்க்கைகொடு நிகழ்பாலி லைனுணர்ந்து, தேயமுழு தும்பரவு துண்டீர வளநாட சிறுபறை முழக்கி யருளே - தென்றலங் கன்றுலவு மன்றவொண் குன்றைமுனி சிறுபறை முழக்கியருளே. (க)

806. ஓங்குமுனி வரரிருவர் கைகுவித் தாமுழக் குறவெழுப் பிக்களிக்க-வுலகமுழு தின்றசிவ காமவல் லித்தா யுலாசனம் விடுத்துநிற்கப், பாங்குபுனைசெம்பொனம் பலநடன நவிலும் பரஞ்சோதி மதுவொழுக்கும் - பச்சைத துழாயண்ணன் மத்தள முழக்கிலும் பரவும்ப ருவகை பூப்ப, வாங்குதிரை யாழ்பாலிவீசுசெம் மணியும்வெள் வயிரமுங் கரைமிராவ - வண்டபுகர் மேயும்வனைகோட்டெருமை யதுகண்டு வாய்வெரீஇ யோடவெடுக்குங், தேங்குதிரு வம்பரவு துண்டீர வளநாட சிறுபறை முழக்கியருளே - தென்றலங் கன்றுலவு மன்றவொண் குன்றைமுனி சிறுபறை முழக்கியருளே. (உ)

807. புகழ்ச்சரியை கிரியையை யனுட்டித்து வருகின்ற புண்ணியப் பேற்றினோர்க்குப் - புலரியிற் சிவபிரான் றளியெழுஞ் சங்கமுற் போதரு முழக் காகவு, மிகழ்வில்சிவ யோகசா தனமரீஇ யம்முறை யியங்குதிற லாளருக்காங் - கெழுகின்ற சங்கபட கம்பேரி யாதியி னிசைப்பெரு முழக்காகவு, மகிழ்கின்ற பாலியாற் றலையெழீஇக் கற்பக மலைத்தோட வதனடிக்க - ணவாய்நின்ற காமதே னுவை நோக்கி நின்று லமைந்ததிப் படரெனநனி, திகழ்கின்ற செல்வ முயர் துண்டீர வளநாட சிறுபறை முழக்கி யருளே - தென்றலங் கன்றுலவு மன்றவொண் குன்றைமுனி சிறுபறை முழக்கியருளே. (௩)

808. ஆன்றசிவ புண்ணிய முழக்கமும் பற்பலவ ராயவடி யவர்தம் வரலா - றுகிய சரித்திர முழக்கமுந் தெய்வமண மகலாத தமிழ்முழக்கு, மேன் றபல வாமுழக் கமுமிணை யிலாதாய வினியதிரு வருண்முழக்கு - மெய்துதற் கரிதாஞ் சிவானுபோ கப்பே ரிரும்பெரு முழக்குமான, மான்றலைபங் கமுகம் பொழிற்றலைத் தவிர்செய்ய மதுவகிறை தேத்தடைக்கண் - வான்பிறைக் கோடுதற் கவரின னெனக்கிளை வாவிகுள மோடை யெங்கும், தேன்றவழ வது விழுந் துண்டீர வளநாட சிறுபறை முழக்கி யருளே - தென்றலங் கன்றுலவு மன்றவொண் குன்றைமுனி சிறுபறை முழக்கியருளே. (௪)

809. வில்லூரு மணிமோலி வளவர்பெரு மான்பொனடி வீழாத மருவ லர்க்கும் - வெண்ணீறு கண்மணி புனைந்தைந் தெழுத்தெணு வீணராஞ் சமய ருக்கும், மெல்லூரு மொண்சிவ மணங்கமழ்த லில்லா திமையந்தசந் தாமணிமுத - லெந்நூற்கு மெய்த்தலம் பறைமுழக் கேயாக வெல்லொளி மழுக்குமேனிச், சொல் லூரு மெம்பிரான் பெருமதம் பொழிமன் டுழாங்கைமா லியானைதந்த - தோற் போர்வை போர்த்தெனத் தென்றல்வந் துலவவழ றேற்றுதேமாஞ் சோலைமேற், செல்லூரு மேன்மையமை துண்டீர வளநாட சிறுபறை முழக்கியருளே-தென் றலங் கன்றுலவு மன்றவொண் குன்றைமுனி சிறுபறை முழக்கியருளே. (௫)

வேறு.

810. பிதிருந் தாமரை யின்பா லளவிப் பிழிசுவை மதுவிரவிப்
பிறங்கிய புல்ல கண்ட றிற்இச்சுவை பெருகண் டுங்கூட்டி
யெதிரும் பொருளில் பலாக்கனி மாங்கனி யிலைவா ழைக்கனிமு
னியையு முழுக்கனி முந்திரி கைக்கனி யிவ்விர தமுநாட்டி
யதிருங் கடலமிர் தமுமு ளுறுத்தி யவாங்குழல் வீணையிசை
யத்தனை யும்புக வைத்துச் சிவமண மகலா தேகமழ
முதிரு மருட்கவி பாடிய புலவன் முழக்குக சிறுபறையே
முழுமணி மாடக் குன்றத் தூரன் முழக்குக சிறுபறையே. (௬)

811. அத்தி தருங்கவி யென்மரு னன்று வறைகுதி ரம்மட்டோ
வவாவிய புத்தி தருங்கவி யென்மரு மதுமட் டோவின்னுஞ்
சித்தி தருங்கவி யென்மரு மெல்லாத் தீர்த்தங் களுமுறுமா
செய்யாச் சுத்தி தருங்கவி யென்மருந் செப்பிய வம்மட்டோ

யர் குலாதிபன் சிறுதே ருருட்டியருளே-சிறுகோ லெடுத்தரசு செங்கோ னிறுத்திஞேன் சிறுதே ருருட்டியருளே. (௧)

816. முறியுமல ரும்பொ நவு திருமேனி யுமையம்மை மூவுல குபத்தமுவுபு - மூரிப் புனற்கம்பை யெம்பிரான் றிருமேனி முற்றுங் குழைத்தருளான்றி, லறியும்வகை யறமெலாம் பொலியவிரு நாழிநெல் லளந்தப் பிரான்கொடுக்க - வனையமா தேவியேற் றேற்றவை யுயிர்த்தமக ளாலுயிர்த் தோர்களோடீர், னெறியுல னும்பெருக வளரெனல் குறித்தவர்கை நீட்டப் பணிந்து வாங்கி - நீடுங் கொழுக்கொடுதம் மனையுதவி யானனி சிரம்பப் பெருக்கு குடியுட், செறியுமொரு குடியாய சேவையர் குலாதிபன் சிறுதே ருருட்டியருளே - சிறுகோ லெடுத்தரசு செங்கோ னிறுத்திஞேன் சிறுதே ருருட்டியருளே. (௨)

817. வெருவப் பகைக்கடல் சுவற்றழ லரும்புகண் விரைத்தாத கித்தொடையலான் - வீசவீ சுப்பற்று வாம்பரி யுகைத்துமிளிர் வெங்கடாக் களிறுகைத்து, முருவக் கதிர்த்தா மாலைகால் யாத்திட்ட வொள்ளொளிய யானமூர்ந்து - மொருநம்பி யாரூ ரனைப்புகலி யாண்டகையை யொப்பா யிஞயதா அன்று, மருவப் பொலித்த பட்டேருரின் முதலடி மரீஇயவிரு வருளொருவரு - மானவாய் வையக மெடுத்தேத்த நிறைபுனல் வயங்குமூ ரணிசிகர்த்த, திருவப் பெருக்கினமை சேவையர் குலாதிபன் சிறுதே ருருட்டியருளே-சிறுகோ லெடுத்தரசு செங்கோ னிறுத்திஞேன் சிறுதே ருருட்டியருளே. (௩)

818. வசைதவிர் வினைத்திட்பம் வாய்ந்தாக வப்பாரின் மாற்றல ரெதிர்ந்த காலை - மழைமதக் களிபானை வாம்பரி சுபத்தவமூன் மற்றுள வருதினியெலா, மசையில் படைக்கலன் கொடுநாழி லாட்டுபுக லாறு வெழுந்த நெய்த்தோ - ரவ்வனிக வழனிழுத் தோடியுவ ராழிபுக் களவிறிடர் செய்யநோக்கி, யிசைமல ரலங்கலொடு வாகையுஞ் சூடியா செய்துப் புனைந்த பெருமா - னிரும்புலியை மேருமுடி யேற்றிப் பெருந்தே ரிணங்குற வுருட்டிநேமி, திசைதிசை யுருட்டச்செய் சேவையர் குலாதிபன் சிறுதே ருருட்டியருளே-சிறுகோ லெடுத்தரசு செங்கோ னிறுத்திஞேன் சிறுதே ருருட்டியருளே. (௪)

819. சாதகப் பறவைக் கிரும்புயற் றுளியுஞ் சகோரத் தினுக்குதிக்குஞ்-சந்திரன் விடுங்கரமு மம்புயத் திற்கேழு தாம்பரித் தேரிரவியு, மேதக வுறுந்தவத் திற்கருளு மப்வருள் விளக்கத் திலுங்குழவு-மேவருங் கல்விக்கு நுண்ணறிவு நுண்ணறிவு வீக்கத் திருக்கொழுக்கு, கோதக விலாதமைச் தாங்கருள் வழிச்செலீஇ நோய்ப்பிறவி போக்குவார்க்கு - நோர்நவர் புராணமில் லாதமைதராதா நுவன்றெம்மை யாண்டவெம்மான், றீதக மதித்திடாச் சேவையர் குலாதிபன் சிறுதே ருருட்டியருளே - சிறுகோ லெடுத்தரசு செங்கோ னிறுத்திஞேன் சிறுதே ருருட்டியருளே. (௫)

820. எய்குன்ற வார்சிலைப் பெருமா னுளத்துவகை யெய்தமறை யோர்கள் குழுமி - யிவையவுப காரணமெல் லாந்தகச் சேர்த்தினிய தென்னுமொருதேத்தமர்ந்து, பொய்குன்ற யாகுண் டத்தழ லெழுப்பமேற் போயபூம் புகைவானொடு-பொலியுமுச் சைச்சிரவ மயிராவ தந்தான் பொறுத்ததிறமேவச்செயா,

மெய்குன்ற வந்தவர் தென்னெனக் கற்பகம் வெதும்பப் புரிந்து மின்னும் - விண்ணுடடங்கவு நண்ணு வரம்பையர் விழித்துணை பொருந்தி மைப்பச், செய் குன்றை யம்பதிச் சேவையர் குலாதிபன் சிறுதே ருருட்டி யருளே - சிறுகோ லெடுத்தரசு செங்கோ னிறுத்தினோன் சிறுதே ருருட்டி யருளே. (௬)

821. புழுங்குங் கதிர்ப்பருதி யெழுமுறுக் குடைமுகப் புண்டரீகத் தடத் துப் - பொலிதரச் சூழ்ந்து நிற் கின்றகரு விடபமலர் பொழிமது முழுக்க வீழ்ந் தே, யெழுங்குங் குமத்தோ ளிணைத்துழல யார்கள்கள விரதமன் றென்றுநீங்க - வெறிதிரை கொழுங்காலை யளவிலோ திமமாக்க ணெய்திப் படிந்து துளைய, வழுங்குந் தரத்தவாய் மேலெழுமன் னீங்கியோ ராகமுழு வதுணைந்தே - யருமை வெண் முகில்செய்ய தேன்பொழித லெனவியந் தாகாய நோக்கிநிற்குஞ், செழுங் குன்றை யம்பதிச் சேவையர் குலாதிபன் சிறுதே ருருட்டி யருளே - சிறுகோ லெடுத்தரசு செங்கோ னிறுத்தினோன் சிறுதே ருருட்டி யருளே. (௭)

822. வெங்கடிய வாணவ மலக்குரட் டிருளாம் வெரீஇப் பதறியோட் டெடுக்கும் - வெண்ணீறு சாதனம் விழைந்தவர்த முககமல மேவுற் றெருங்கு மலரும், பங்கமுற மேவு பரசமயர்வா யாம்பல்பல வந்துயர மைந்து குவியும் - பரவுவே தாகம புராணமெனு மங்கலப் பணை ரிக் கெழுக்கொலிக்கு, மங்கலுமு மாதரா ருடலி னெறிந்தகுழையன் றித் தடப்பாரில - ரவைகளையு மகலுற வகற் றினே மண்ணகத் தமையவெழு கின்றதாய, செங்கதி ரெனச்சொலச் சேவை யர் குலாதிபன் சிறுதே ருருட்டி யருளே - சிறுகோ லெடுத்தரசு செங்கோ னிறு த்தினோன் சிறுதே ருருட்டி யருளே. (௮)

823. சுவையமையு மோதகங் கனிபலவு மற்றவுங் கும்பிமுக வற்குநல் கித் - தொழவமுது செய்தலா லூறென் பதிக்ககர் சூழ்நக ரிரும்புகாது, நவைய தடை யாதென்னி னச்சுமுதல் வலியவே நலிலவேண் டுவதினிபெவ - னன்னு தற் றிருநீறு நிலவெறிக் கக்குழை நலங்கொண்மணி வெயிலெறிக்க, வவையகம் வியக்குமுப் புலவருருண் முக்கனி யருந்தமிழ்ச் சுவையனைத்து - மாராய்ந் தெடுத் துப்படல் செய்யுண்முக மாவறிய வறிவித்த பெருநாவலன், சிவையுதவு சொற் கொண்ட சேவையர் குலாதிபன் சிறுதே ருருட்டி யருளே - சிறுகோ லெடுத் தரசு செங்கோ னிறுத்தினோன் சிறுதே ருருட்டி யருளே. (௯)

824. பண்புகெழு கின்சரித் திரவினிய பாவாற் பரப்பிய திருக்கைலாய - பரம்பரை யுமாபதி சிவன்புகழு மவன்முன்னோர் பைம்புகழு மவன்வழிவரு. நண்பு புனை தவர்புகழு மினிமேலும் வருபவர் நயப்புகழு நீடுவாழ - நாடுவித நீசெய்த மாபுரா ணத்தமரு நாயன்மார் பெருமைவாழ, விண்புகழு நால்வர்திரு வாய் மலர்ந் தருடிரா விடவேத மென்றும் வாழ - மெய்யன் பினின்று லயப்பணி முதற்புரி விருப்பமிக் கார்கள்வாழத், திண்புவி யெடுத்தேத்து சேவையர் குலா திபன் சிறுதே ருருட்டி யருளே - சிறுகோ லெடுத்தரசு செங்கோ னிறுத்தினோன் சிறுதே ருருட்டி யருளே. (௧0)

௧௦.—சிறுதேர்ப்பருவம் முற்றிற்று.

---

சேக்கிழார் பிள்ளைத்தமிழ் முற்றிற்று.

---

உ

சேக்கிழார் பிள்ளைத்தமிழ்ச்

# *சிறப்புப்பாயிரம்.

இது
திருவாவடுதுறை ஆதீனத்து
அடியார்குழாத்தொருவரும், இந்நூலாசிரியரிடத்திற் கல்விபயின்றவருமாகிய
**ஆறுமுகச்சுவாமிகளியற்றியது.**

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

825. சீர்பூத்த பாலாற்றின் புனல்பரந்து காலாற்றிற் சேற லாலே, பார்பூத்த குடிதழைப்பப் பலவளனு மாங்காங்குப் பரவ வாக்கிக், கூர்பூத்த வறிவான்மிக் கோர்பலரைத் தழுவியௌவை கூறுங் கூற்றை, நார்பூத்த நாடொறும்பார் நிறுவிவருந் தொண்டைவள நாட்டின் மாதோ. (௧)

826. மன்னியசீர் மறையொலியுந் தமிழ்வேத மறையொலியும் வயங்குசீர்த்தி, துன்னியவா சகவொலியுந் தொண்டர்கள்செய் யரவொலியுந் துவன்றியெங்கு, முன்னியமற் றவர்க்குவே ளாண்குலத்தோ ருபசரிக்கு மொலியு மேன்மேன், மின்னியகா லந்தொறும்விண் ணுடுசெவிடுறச் செய்குன்றை வியனூர் தன்னில். (௨)

827. நிலந்தழைப்ப வெண்ணீற்று நெறிதழைப்ப வஞ்செழுத்து நிலவி மேன்மேல், வலந்தழைப்ப வுயர்சைவம் வலிதழைப்ப மறுசமயம் வறப்பத் தொண்டர், புலந்தழைப்ப வடியேம்விண் டலந்தழைப்ப நலந்தழைப்பப் பொலிவேளாளர், குலந்தழைப்பச் சேவையர்கள் குடிதழைப்பத் தமிழ்தழைப்பக் குறிப்பாருய்ய. (௩)

828. உலகுய்யத் திருத்தில்லை நடவில்வார் திருவருளா லொருவர் வந்து, கலவுபுகழ்ப் பாலறு வாயர்முனந் தோன்றியருட் கார ணார்த்தம், விலகிலருண் மொழித்தேவ னெனும்பிள்ளைத் திருநாமம் விளங்கிப் பின்பு, சுலவுசேக்கிழார் மரபு விளக்கலிற்சேக் கிழாரெனும்பேர் துலங்கப் பூண்டு. (௪)

829. காற்றுபகை யநபாய னமாத்தியராய்ப் பெருமுதன்மை கதிர்ப்பப் பெற்றுத், தோற்றுபுறச் சமயமெலா மொருங்கவிய வென்றருளித் தொழுவார்க் கன்பு, தேற்றுதில்லை நடராசர் முதலருளத் திருத்தொண்டர் திருப்புராணம், மாற்றுமல மருந்தெனவாய் மலர்ந்தருளும் பெரும்புகழார் மலர்ப்பூந் தாளில். ()

* இது பழையபதிப்பைச்சார்ந்தது. [பதிப்பித்தகாலம், கி. பி. 1876].

830. தேக்குபுகழ்ச் சோளுட்டித் திரிசிரா மலையின் மிகு திருவ மோங்கும், தூக்குபுகழ் வேளாளர் குலாம்புதியிற் சிதம்பரமே யிலங்கப் பன்னு, ளாக்குபுக ழெனத்தோன்றிப் பலகலையு மொருங்கேயாய்ந் தான்றோர் பல்லோர், வீக்குபுகழ் பரந்தகயி லாயபரம் பரையாகி விளங்கா நின்ற. (௬)

831. எங்குறை சையையடைந்தம் பலவாண தேவனடி யினிது சூட்டித், துங்கமுடி வாய்ந்துசிவ ஞானகலை யகங்கை செல்வித் தோற்றத் தாய்ந்து, கங்கைதரித் தருள்சடையோன் பலதலத்து மான்மியத்தன் கருத்தி னோர்ந்து, சங்கையில்செந் தமிழின்மொழி பெயர்த்தியற்றுங் கடப்பாட்டிற் றலைமை யானோன். (௭)

832. மின்னுமர னடியயர்றிக் கனவிலும்வே றெண்ணாத விரதம் பூண்டோ, னின்னுமெம்போ லியர்பலருக் கிலக்கியமு மிலக்கணமு மெளிது தந்தோ, னன்னவன்பேர் மீனுட்சி சுந்தரநா வலவனென வாய்ந்தோ ரியாரும், பன்னுபுகழ் பூதலமு மீதலமும் பாதலமும் பரவ நின்றோன். (௮)

833. மற்றவர்மான் மியப்பெருமை யருமையுட னுளத்துணர்ந்து மகிழ் பேரன்பாற், கற்றபய னிஃதேயடைந்தோ மிம்மையு மைப்பயனுக் கதிர்க்கு மீதென், றுற்றருமை பெருமைதொண்டர் புராணவிரா சியமுழுது மொருங்கே தோன்றச், சொற்றபிள்ளைத் தமிழெனவோர் பாமாலை தொடுத்தனன்மெய்த் துறவோர் போற்ற. (௯)

834. வென்றபுக ழினியார்மான் மியத்தமிழால் விரித்தருளு மேன்மை யாள, ரொன்றுபுகழ் மரபிலுளா ரிதயத்தற் குரியரென வுவந்து சான்றோர், நன்றுபொலி துறைசையிற்சுப் பிரமணிய குருமணியுண் ணயந்து நட்டென், றென்றுமுடி யடிகடொறுந் துளக்கவவை வியக்கவரங் கேற்றி னானே. (௧௦)

சிவமயம்.

திருவாவடுதுறை

# ஸ்ரீ அம்பலவாணதேசிகர் பிள்ளைத்தமிழ்.



## பாயிரம்.

### விநாயகர்துதி.

835. சீர்கொண்ட தகுதியிற் றிரிகுணமு நிறுவிய திறத்தடிக் கருமுடிகங் - திகழ்நடுச் செம்மணி யொளிப்பணி முடிச்சிதச் சிறுபிறை வயக்கிடுதலாற், றார்கொண்ட மலர்செறி கிழக்குமேக் கொடுபகை தவிர்ந்துதாய் நாப்பணட்டுத்- தாப்பிசைப் பொருள்கோளின் மேவவமர் கயமுகத் தம்பிரான் றாள்பரசுவாம், பார்கொண்ட தன்பொதுப் பெயரெழுத் தின்றுறைப் படிகொண்ட வாவடுதுறைப் - பதிகொண்டு அதிசிறப் புப்பெயரு மத்தொலைகப் படிகொண்டு பரவுயிர்கள்பாற், கூர்கொண்ட வத்தொகை யதன்றொழி லறக்கருணை குலவியத் தொகையபாசங் - கூடா தளிக்குமம் பலவாண தேசிகன் கொழிதமிழ்க் கவி தழையவே.

ஆன்றோரிலக்கணமுகமாகக் காவற்கடவுளாவா ரிவரெனத்
துணிந்து அவ்வழிச் சென்றமைகூறியது.

836. வழிபடுதே வருநங்கொலைதிர் தெய்வதங்காப்புரைக்கவென வகுத்த வான்றோர், மொழியுணர்ந்து மவ்வழிச்சென் றிலர்முன்னே றிரும்புகழ்க்கோ முத்தியெங்கள், பொழிகருணைச் சின்மயனம் பலவாண தேசிகன்மேற் புகலப் புக்க, கழிமகிழ்யா மவ்வழிச்சென் றனஞ்சிறக்கு மிப்பிள்ளைக் கவியுந் தானே.



## ௧.—காப்புப்பருவம்.



### திருநந்திதேவர்.

837. பூமேவு வேதா கமப்பொரு ளடங்கலும் பொலங்கொளிக் கைலைப்பிரான் - பொற்பத் தெருட்டத் தெருண்டுரா னக்குரவு பூண்டுமா லயனுதியோர், தாமேவு மணிமுடித் தலைவணங் குக்தொழுந் தாங்குந் தொழுந்தழும்பு - தாட்புற மகங்கொண்டு பொலிநந்தி நாயகன் றன்பெரும் புகழ்பரசுவாம்,

